॥ श्रीराधाकृष्णपरब्रह्मणे नमः ॥



त्रिवेदि

# ॥ संध्यावन्दनम् ॥

## முவ்வேதிகளின்

# ஸந்தியாவந்தனம்

## தமிழுரையுடன்

இச்சிறந்த உரை

ஹோபாத்யாய வேதாந்தகேஸரி

ஸ்ரீ கணபதி சாஸ்திரிகள்

களின் முக்கியசிஷ்யரும்

ந்த சாஸ்திர பாரங்கதரும், பாகவத

க்ஷேபன்யாஸகரும், சோதிட

மந்திர சாஸ்திர வித்வானும்

'ஆர்யமதஸம்வர்த்தனீ' பத்திராதிபருமான

## பிரும்மஸ்ரீ கடலங்குடி நடேச சாஸ்திரிகள்



அவர்களால் இயற்றி தமது

"ஆர்யமதஸம்வர்த்தனீ" பிரஸ்ஸில் அச்சிட்டு

இரண்டாம் பதிப்பு பிரசுரஞ் செய்யப்பட்டது.

காபிரைட்] 1927

। शाश्वतधर्मगोप्त्रे श्रीमते वासुदेवायनमः ।

# ॥ त्रिवेदिसंध्या वन्दनम् ॥

## மூன்று வேதிகளின் ஸந்தியாவந்தனம்.

## இரண்டாவதுபதிப்பு.

### முகவுரை.

நாம் நமது "ஆர்யமதஸம்வர்த்தனீ" என்ற ஸஞ்சிகையில் மூன்றுவேதிகளின் ஸந்தியானுஷ்டான மந்திரங்களை தேவநாகரலிபியில் மட்டும் மூலமும், தமிழில் பதவுரை, கருத்துரை, விசேஷ உரைகளுடனும் புஸ்தகமாகப்பைண்டு செய்து கொள்ளும்படித் தனிப்பக்க நம்பர்கொடுத்து ஒவ்வொருமாதமும் வெளியிட்டுவந்தோம். அவ்விதம் வெளியிட்டதில் ஸம்வர்த்தனியின் சந்தாநேயர்களுக்கு அனுப்பியதுபோக மீதமுள்ள ஸ்வல்பக் காப்பிகளைப் பின்னர் புஸ்தகமாகப் பைண்டுசெய்து தனிப் புஸ்தகமாகவும் வேண்டுவோர்க்குக் கொடுத்துவந்ததில் அந்தஸ்வல்பக் காப்பிகளும் விலையாகிவிட்டதினின்றும் இரண்டாவது முறை அதைப் பதிப்பித்து வெளிட்டிருக்கிறோம்.

ஆனால் முதற்பதிப்பில் வெளியான நமது ஸந்தியாவந்தன புஸ்தகத்தை வாங்கும் விஷயத்தில் பர்பாரா, தேன் ஆப்பிரிக்கா, பர்மா, ரங்கோன், கொழும்பு முதலிய வெளிநாட்டில் ஏதோ ஜீவனார்த்தம் குடியேறின நமது ஆரியப்பிராம்மண ஸஹோதர்களிடமிருந்தும், நமது தென்னிந்தியாவிலுள்ள பல பிராம்மண ஸஹோதரர்களிட மிருந்தும் நமக்குக்

கிடைத்த விக்ஞாபன கடிதத்தைக் கொண்டும் நேரில் வந்து வாங்கும் பொழுது பலப்பிராம்மண ஸஹோதரர்கள் வேண்டிக்கொண்டதைக்கொண்டும், இந்த இரண்டாவது பதிப்பில் மூன்றுவேதிகளின் ஸந்தியாமந்திரங்கள் யாவையும், தேவநாகரம், கிரந்தம், தமிழ், இந்த எழுத்துக்களில் அச்சிட்டும் பதவுரை எழுதுமிடத்தும் முற்கூறிய மூன்று எழுத்துக்களிலும் அந்தமந்திரபதங்களை அச்சிட்டும் அவற்றிற்குத் தமிழில் மொழிபெயர்ப்பை அச்சிட்டும் வெளியிட்டிருக்கிறோம். அத்துடன் இந்தப் பதிப்பில் ஸந்தியாமந்திரங்களை மட்டும் தனியாய் அதே மூன்று எழுத்துக்களிலும் அச்சிட்டு வெளியிட்டிருப்பதுடன், மூன்று வேதிகளின் ஸமிதாதானம், ஔபாஸனம், பிரும்ஹயக்ஞம், யக்ஞோபவீததாரண மந்திரம், பீஷ்மதர்ப்பணம் ஆகிய இவைகளையும்,தேவநாகரம் கிரந்தம் ஆகிய இரண்டு எழுத்துக்களில் மட்டும் அச்சிட்டும் பலர் வேண்டுகோளுக்கிணங்க வெளியிட்டு மிருக்கிறோம். ஆகவே இந்தஇரண்டாவது பதிப்பானது வைதிககர்மங்களை யனுஷ்டிப்பதில் மிக்கஆவல்கொண்ட நமது ஆர்யப் பிராம்மண ஸஹோதரர்களின் கோரிக்கையைப் பூர்த்திசெய்திருப்பதுடன் அவர்களுக்கு ஸத்கர்மானுஷ்டான விஷயத்தில் பரம உபகாரத்தைச் செய்வதாகவுமிருக்கும் என்பதில் யாதும் ஐயமில்லை. ஆனால் இங்கு ஒருவிஷயத்தைத் தெரிவித்துக் கொள்ளுவது அவசிய மாகின்றமையின் அதையும் எழுதுகிறோம்.

அதாவது: நமதுமுதற்பதிப்பு ஸந்தியாவந்தனபுஸ்தகம் வெளியானதும் இரண்டொரு விடங்களில் இரண்டொருவரால் "நமது ஆரியமதத்தின் ஆணிவேரான இம்மந்திரங்களை

இம்மாதிரி தமிழில் மொழிபெயர்த்து வெளியிடலாகுமா? இவ்வெளியீட்டின் மூலம் இம்மந்திரங்களில் உண்மையில் அதிகாரம் பெறுத ஏனையஜனங்கள் அம்மஹா மந்திரங்களை யறிந்து அதன்படி அனுஷ்டிக்கத் தொடங்கி விடக்கூடுமாக லின் அவ்விம் செய்தது முற்றிலும் தவறுன காரியமாகு மல்லவா?" எனச்சொல்லத்தலைப்பட்டதாக நாம் கேள்விப் பட்டோம். ஆயினும் நமக்கு அவர் சொல்லுவதில் யாதும் பொருளிருப்பதாகப் புலப்படாமை பற்றியே இரண்டாவது தடவையும் அதைத்தனியாய் கிரந்தம் தமிழ் இந்த எழுத் துக்களிலும் மூலமந்திரங்களை அச்சிட்டு வெளியிட்டிருக் கிறோம். மேலும் இவ்விஷயத்தை நாம் இவ்விதம் வெளி யிடுவதில் தவறு எதுவும் இல்லை என்பதே எமது அபிப் பிராயமுமாகும். அது எவ்விதமெனின்? கூறுவாம்.

நாமே இதேபுஸ்தகம் 28வதுபக்கத்தில் காயத்ரீ முதலிய மஹாமந்திரங்களை உபநயனுதிவைதிக ஸம்ஸ்காரம் பெற்ற த்விஜர்கள் தான் ஜபிக்கவேண்டும் என்றும், மற்றவர் அவற்றை ஜபிக்கக்கூடாதென்றும், அவ்விதம் மற்றவர்கூறுவ தனுல் அவர்க்கு எவ்விதப்பயனும் உண்டாகாததுடன், வேத கர்த்தாவான ஆண்டவனுடையவும், அவனது ஆணையைச் சிரமேற்றுங்கிய நித்தியர்களான வஸிஷ்டாதி மஹரிஷிகளு டையவும் கோபத்திற்கும் ஆளாக வேண்டிவரும் என்பதை ஒரு ஜமீன்தாரருக்கும் அவரிடம் வேலைபார்க்கும் பிராம் மணனுக்கும் நடந்த ஸம்பாஷணு ரூபமானகதையினுல் தெளிவாய் வெளியிட்டு விட்டோம் என்பதாம்.

சங்கை—அங்ஙனமாயினும் எவரும் அம்மந்திரகளைப் படித்தறியும்படி அவற்றை தேவநாகரலிபியில் வெளியிட்

டதே ஆக்ஷேபிக்கப்படும் பொழுது கிரந்தம், தமிழ் ஆகிய எழுத்துக்களிலும் அம்மந்திரங்களை அச்சிட்டு வெளியிட்டு விட்டு அதை அதிகாரமில்லாதவர் படித்தல் தகாதென்று சொல்லுவதால் மட்டும் இது போதுமான ஸமாதானமாக எவ்விதமாகக்கூடும் ? ஆகவே அதிகாரம் பெருதவரையும் படிக்கும்படி செய்ததாலுண்டான தோஷம் உங்களுக்குண் டாகாதோ எனின் ?

உத்தரம்—அதனுண்மையை இங்கு விளக்குவாம். அதாவது:—ஒரு ஊரில் பலஜனங்களின் ஸ்னானபானுதிகார் யங்களுக்கு உபயோகிக்ககூடியபடி ஒருவன் ஒரு பெரிய கிணற்றை வெகுபாடுபட்டு வெட்டினன் என்று வைத்துக் கொள்வோம். வெகுபாடுபட்டு இவன் வெட்டிய கிணற்றில் பலர் ஸ்னானஞ்செய்தும் தாகநிவிருத்திசெய்துகொண்டும் வரும் பொழுது அறிவிப்புப்பலகையையும் கவனியாது அவி வேகத்தால் அவ்வூரிலுள்ள ஒருவன் அடி கிணற்றில் தவறி விழுந்து உயிர்துறப்பானேல் அக்குற்றம் பலரின் உபகாரத் திற்காக கிணற்றை வெட்டின மஹாபுருஷனை எவ்விதம் சேரும் ? ஒருபொழுதும் சேருது. ஏனெனில் கிணறு வெட்டினவனுடைய நோக்கம் நல்லதாகையால் அவனுக்கு நல்லபலனேதானுண்டாகும் என்பதில் ஐயமில்லை. இவ்வித மே நாமும் இதில் அதிகாரம் பெற்றத்விஜர்கட்கு உதவிபுரிய வெண்ணங்கொண்டு வெகுபாடுபட்டு இக்காரியத்தைச் செய் திருப்பதால் இதனுல் எவ்விததோஷமும் நமக்குவருவதற் கிடமில்லை. ஆனுல் கிணறு வெட்டினவனுக்குப் புண்ணியம் அதிகமாகவந்தபோதிலும், அதில் விழுந்து ஒருவன் மரிக்க நேர்ந்ததாலுண்டான ஸ்வல்பபாபமும் கட்டாயம் வரத்தான்

வரும். இவ்விதமே அதிகாரம் பெற்ற த்விஜர்க்குபகரித்த தால் புண்ணியமுண்டாயினும், அதிகாரம் பெருதவரைப் படிக்கும்படி தூண்டினதால் தோஷமும் கொஞ்சம் வரத் தான் வரும் என்று ஒரு சிலர் பிடிவாதமாகக் கூறலாம். அவ்விதமாயினும் நமக்கதில் பயம்யாதுமில்லை. ஏனெனில்? நமது ஆர்யத்விஜஸஹோதரர் அனேகர்க்கு அதனுலுபகார மிருப்பதுடன், இவ்விதமாக்ஷேபிப்பவர்க்கும் இதனுல் உப கார முண்டென்பதை இவரேஒப்பினவராகவும் ஆகின்ருர். ஆகவேஅதிகாரம் பெருதவரைத் தூண்டினதால் நமக்கு நேரக்கூடியதாக இவரால் எதிர்பார்க்கப்படும் தோஷம் உண்மையில் வருமானுல் அதை எமது இஷ்டதைவமும் சாசுவததர்மகோப்தாவும், பக்தபக்ஷபாதியுமான ஸ்ரீ கோ பாலனுடைய தியானத்தால் நாம் கட்டாயம் போக்கிக் கொண்டே விடுவோம் என்ற நமது திருடநம்பிக்கைநமக்கி ருப்பதால் என்னைப்பற்றி எனது நண்பர் கவலைப்படவேண்டு வதவசியமில்லை. மேலும் இவ்விதமொழிபெயர்ப்பின் வெளி யீட்டால் எமக்கு வேண்டுமானுல் இவரதுமொழிப்படி பாபம் நேரலாமேயொழிய இதைப்படிக்கும் அதிகாரியான நமது ஆர்யத்விஜஸஹோதரர்க்கு எவ்விதபாமும் நேராதாகையா லும் அதுவே நமது முக்கியகோரிக்கையாகையாலும் எவ் வழிப்படிபார்த்தாலும் இப்புஸ்தகத்தை நாம் வெளியிட்ட தில் எவ்விதகுற்றமும் இல்லையென்பதே எமது துணிபு. நிற்க.

முதற்பதிப்பில் தேவநாகரலிபியில் மூலமும் தமிழுரை யுமாக டிம்மி எட்டுப்பக்க அளவில் 141 பக்கம் அதாவது டிம்மி 18 பாரம் உள்ளதாக அதை வெளியிட்டிருந்தோம்.

இந்த இரண்டாவது பதிப்பில் டபிள் கிரௌன் 16 பக்க அளவில், 400பக்கங்கள் உள்ள 25 பாரங்களில் இதை வெளியிட நேர்ந்திருப்பதால், இரண்டாம்பதிப்பிற்கு முதற் பதிப்பைவிட விலை அதிகமாக ஏற்பட்டிருக்கிறது. பொது வாய் தத்காலம் எவ்வளவோ ஆபாஸமான நாவல்களை யெழு திமலிவான தமிழ் எழுத்தில் அச்சிட்டும்கிரௌன் 16பக்கம் கொண்டபாரம் 1க்கு 2 அணு விலைவைத்தும் பலர் விற்கின் றனர் என்பது உலகமறிந்த விஷயம். நாமோ, விலை அதிக முள்ள தேவநாகரம், கிரந்தம் முதலிய எழுத்துக்களில் அச் சுக் கோர்க்கும் விஷயத்தில் ஏராளமாகச் செலவுசெய்து அபூர்வமும், ஆர்யசிகாமணிகளுக்கு மிக்கமிக்க முக்கியமா னதுமான இந்த மந்திரங்களுக்கு தமிழில் வெகுபாடுபட்டு உரையும் எழுதி வெளியிட்டு கிரௌன் 16 பக்கங்கொண்ட பாரம் 1க்கு $1\frac{1}{2}$ அணு வீதங்கூட ஆகாதமுறையில் விலை வைத்து வெளியிட்டிருக்கிறோம். ஆகவே ஆரிய சிகாமணி கள் யாவரும் இம்மொழி பெயர்ப்பை வாங்கிப்படித்து தத் தங்கர்மத்தின் பயனறிந்தனுஷ்டித்து ஸர்வகர்ம ஸமாராத்ய னை ஸ்ரீ கோபாலனுடைய அருளைப்பெறுவார்களாக.

॥ ओम्, तत्, सत् ஓம், தத், ஸத் ॥

॥ श्रीकृष्णः प्रीयताम् ஸ்ரீ க்ருஷ்ண: ப்ரீயதாம் ॥

॥ शुभम् ஶுபம் ॥

பிரும்மஸ்ரீ கடலங்குடி நடேசசாஸ்திரிகள்.
ஆர்யமதஸம்வர்த்தனீ பத்திராதிபர்

# பொருளடக்கம்.



பக்கம்.

---

# ஸந்தியாவந்தனம்முதலிய தனிவிஷயங்களின் அட்டவணை

ॐ



உ

சுபம்.

ஸ்ரீ கோபாலன் துணை.

# शाश्वतधर्मगोप्त्रे श्रीमते राधाकृष्णपरब्रह्मणे नमः ।

# ஸந்தியா வந்தனம்.



संध्यावन्दनम्.—संध्यायाः=मूर्तित्रयातीतायाः चिच्छक्तिरूपायाः देवतायाः, वन्दनम्=स्तुतिनमस्कारादिकं वैदिकं कर्म संध्यावन्दनमित्युच्यते ॥

𑌸𑌂𑌧𑍍𑌯𑌾𑌵𑌨𑍍𑌦𑌨𑌂.—𑌸𑌂𑌧𑍍𑌯𑌾𑌯𑌾𑌃=𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌤𑍍𑌰𑌯𑌾𑌤𑍀𑌤𑌾𑌯𑌾𑌃 𑌚𑌿𑌚𑍍𑌛𑌕𑍍𑌤𑌿𑌰𑍂𑌪𑌾𑌯𑌾𑌃 𑌦𑍇𑌵𑌤𑌾𑌯𑌾𑌃, 𑌵𑌨𑍍𑌦𑌨𑌂=𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌨𑌮𑌸𑍍𑌕𑌾𑌰𑌾𑌦𑌿𑌕𑌂 𑌵𑍈𑌦𑌿𑌕𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌂𑌧𑍍𑌯𑌾𑌵𑌨𑍍𑌦𑌨𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

மும்மூர்த்திகளுக்கும் மேலானதும், சித்சக்தி வடிவமானதுமான தேவதையினது நமஸ்கார ஸ்தோத்திரரூபமான வைதிக கர்மமே ஸந்தியாவந்தனம் எனப் பெரியோர் நிச்சயித்திருக்கின்றனர். இவ்விதமே—

या संध्या सा जगत्सूतिः मायातीता तु निष्कला ।
ऐश्वरी केवला शक्तिस्तत्वत्रयसमुद्भवा ॥

तस्मात्सर्वप्रयत्नेन संध्योपासनमाचरेत् ।
ध्यात्वार्कमण्डलगतां सावित्रीं वै जपेद्बुधः ॥

யா ஸந்த்யா ஸா ஜகத்ஸூதி: மாயாதீதா து நிஷ்கலா ।
ஐச்வரீ கேவலா சக்திஸ் தத்த்வத்ரயஸமுத்பவா ॥
தஸ்மாத் ஸர்வப்ரயத்நேந ஸந்த்யோபாஸநமாசரேத் ।
த்யாத்வார்க்கமண்டலகதாம் ஸாவித்ரீம் வை ஜபேத் புத: ॥

"ஸூரியமண்டலத்தில் அபிவ்யக்தியையடைந்த ஆதித்யன் என்ற தேவனைப் போதிக்கின்ற ஆதித்யன் முதலிய சப்தங்களாற் சொல்லப் படுகின்றவளும், மாயாஸம்பந்த மற்றவளும், எல்லா லோகத்திற்கும் காரணமானவளும், ஜீவன், ஈசுவரன், பிரகிருதி என்ற மூன்று தத்வங்களுக்குங் காரணமானவளும், ஒப்புயர்வற்றுத் தனிமையில் பிரகாசிக்கின்றவளுமான யாதொரு சக்தியுண்டோ அச்சக்தியே **संध्या** (ஸந்த்யா) எனப்படுவள். அவ்வித சக்தியை சூரியமண்டலத்திலிருக்கின்றவளாகவும், மண்டலாபிமானி தேவதையையும் தூண்டுகின்றவளாகவும் தியானஞ்செய்து அவளது சுவரூபத்தைப் போதிக்கின்ற காயத்திரீ மஹாமந்திரத்தை அறிவுள்ளவன் ஜபிக்கக்கடவன்" என்று காச்யபர் முதலிய மஹான்களுமுபதேசித்திருக்கின்றனர். ஆகவே இவ்வித சித்சக்தியைத் தியானஞ் செய்கிறவனாய் ஆசமனம் முதல் அபிவாதன மீறாகச்செய்யுங் கர்மமே "ஸந்தியாவந்தனம்" எனப் பெரியோர் நிச்சயித்தனர் என்று ஏற்படுகிறது. இங்கு ஸந்தியா என்ற பதமானது.

अहोरात्रस्य यस्संधिः सूर्यनक्षत्रवर्जितः ।
सा तु संध्या समाख्याता मुनिभिस्तत्त्वदर्शिभिः ॥

அஹோராத்ரஸ்ய யஸ்ஸந்தி: ஸூர்யநக்ஷத்ரவர்ஜித: ।
ஸா து ஸந்த்யா ஸமாக்யாதா முநிபிஸ் தத்த்வதர்சிபி: ॥

"பகலும் இரவுஞ் சேரும் காலமாகிய சூரிய நக்ஷத்திரங்களற்ற ஸமயமே ஸந்தியை எனத்தத்துவமறிந்த முனிகளாற் சொல்லப் படுகின்றது." என்ற வசனப்படி கால விசேஷத்தைக் குறிக்குமாயினும்,

संधौ संध्यामुपासीत नास्तगे नोद्गते रवौ ।
ब्रह्मणोपास्यते संध्या विष्णुना शंकरेण च ॥
कस्मान्नोपासयेद्देवीं श्रेयस्कामो द्विजोत्तमः ।

𑌸𑌂𑌧𑍌 𑌸𑌂𑌧𑍍𑌯𑌾𑌮𑍁𑌪𑌾𑌸𑍀𑌤 𑌨𑌾𑌸𑍍𑌤𑌗𑍇 𑌨𑍋𑌦𑍍𑌗𑌤𑍇 𑌰𑌵𑍌 ।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋𑌪𑌾𑌸𑍍𑌯𑌤𑍇 𑌸𑌂𑌧𑍍𑌯𑌾 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌨𑌾 𑌶𑌂𑌕𑌰𑍇𑌣 𑌚 ॥
𑌕𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑍋𑌪𑌾𑌸𑌯𑍇𑌦𑍍𑌦𑍇𑌵𑍀𑌂 𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑍍𑌕𑌾𑌮𑍋 𑌦𑍍𑌵𑌿𑌜𑍋𑌤𑍍𑌤𑌮𑌃 ।

"இரவும் பகலுஞ் சேரும் காலமான ஸந்தியில் ஸந்தியா என்ற தேவியை உத்தமப் பிராம்மண குலத்தில் ஜனித்தவன் தியானஞ்செய்யக் கடவன். சூரியன் மறைந்தபின்னர் மாலையிலும், உதயமான பின்னர் காலையிலும் ஸந்தியா தேவியைத் தியானித்தல் கூடாது. பிரும்மா, விஷ்ணு, சங்கரன் இவர்களே ஸந்தியா தேவியைத் தியானித்தனர் என்றால் மேலான நிலையைப்பெற விருப்பமுள்ளவன் இத்தேவியை உபாஸிக்காது (தியானிக்காது) இருத்தல் என்பது எங்ஙனம்?" என்று யோகயாக்ஞ்யவல்கியர் கூறி யிருப்பதிலிருந்து ஸந்தியா என்ற பதத்திற்கு ஸந்தியா எனப்பெயர் பூண்ட தேவதையே பொருளென்றும், முறைப்படி அத்தேவதையை தியானாதிகளால் ஆராதித்தலே வந்தனமென்றும் தெளிவாகின்றது. மேலும்,

प्राक्कूलेषु ततस्स्थित्वा दर्भेषु सुसमाहितः ।
प्राणायामत्रयं कृत्वा ध्यायेत्संध्यामिति श्रुतिः ॥
न भिन्नां प्रतिपद्येत संध्यां वै ब्रह्मणा सह ।
साहमस्मीत्युपासीत विधिनाऽनेन वै द्विजः ॥

𑌪𑍍𑌰𑌾𑌕𑍍𑌕𑍂𑌲𑍇𑌷𑍁 𑌤𑌤𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑍍𑌵𑌾 𑌦𑌰𑍍𑌭𑍇𑌷𑍁 𑌸𑍁𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌃 ।
𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑌤𑍍𑌰𑌯𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌧𑍍𑌯𑌾𑌯𑍇𑌤𑍍𑌸𑌂𑌧𑍍𑌯𑌾𑌮𑌿𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌃 ॥
𑌨 𑌭𑌿𑌨𑍍𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑍇𑌤 𑌸𑌂𑌧𑍍𑌯𑌾𑌂 𑌵𑍈 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌾 𑌸𑌹 ।
𑌸𑌾𑌹𑌮𑌸𑍍𑌮𑍀𑌤𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑍀𑌤 𑌵𑌿𑌧𑌿𑌨𑌾𑌨𑍇𑌨 𑌵𑍈 𑌦𑍍𑌵𑌿𑌜𑌃 ॥

" த்விஜன் (பிராம்மணன்) கிழக்கு நுனியாகப் பரப்பின தர்ப்பங்களில்நின்றுகொண்டுமனத்தைஒருமுகப்படுத்தியும், மூன்று பிராணுயாமஞ் செய்தும் ஸந்தியையை உபாஸிக்க (த்யானிக்க) க்கடவன். அவ்விதம் உபாஸிக்கும்பொழுது ஸந்தியை வேறு பிரும்மம் வேறு என்று நினையாது ஒன்ருக வே தியானஞ்செய்து அந்தப்பிரும்மரூபமான ஸந்தியையே நான்; நானே அந்தச் ஸந்தியை என்ற தேவதை என்று இடைவிடாது பாவிக்கவேண்டும்" என்று வியாஸர் முதலி யோருஞ் சொல்லி யிருக்கின்றனர். ஆகவே ஸந்தியா என்ற பதமானது காலத்தைக் குறிப்பிடுவதாக உலகில் பிரசித்தி யிருப்பதுபோலவே சாஸ்திரங்களில் தேவதையைக் குறிப் பிடுவதாகப் பிரசித்தி இருப்பதாலும், பெரும்பாலும் சேத னத்தினிடமே பொருந்துகின்ற வந்தன சப்தத்தின் சேர்க் கையைக் கொண்டும் சைதன்யமுள்ள தேவதையைக் குறிப் பதாகக் கொள்ளப்பட்டது. இவ்வளவு தூரஞ் சொன்னதி லிருந்து மும்மூர்த்திகளாலும் உபாஸிக்கப்பெற்ற ஸந்தியா தேவியை ஸ்துதி நமஸ்காராதிகளால் உபாஸித்தலே "ஸந்தியா வந்தனம்" என்று ஏற்படுகின்றது. இத்தகைய ஸந்தியாதேவி காலபேதத்தை யொட்டி நாமரூப பேதங் களையுமடைகிருள். அதாவது:—

गायत्री नाम पूर्वाह्णे सावित्री मध्यमे दिने ।
सरस्वती च सायाह्ने सैव संध्या त्रिषु स्मृता ॥

𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍀 𑌨𑌾𑌮 𑌪𑍂𑌰𑍍𑌵𑌾𑌹𑍍𑌣𑍇 𑌸𑌾𑌵𑌿𑌤𑍍𑌰𑍀 𑌮𑌧𑍍𑌯𑌮𑍇 𑌦𑌿𑌨𑍇 ।
𑌸𑌰𑌸𑍍𑌵𑌤𑍀 𑌚 𑌸𑌾𑌯𑌾𑌹𑍍𑌨𑍇 𑌸𑍈𑌵 𑌸𑌂𑌧𑍍𑌯𑌾 𑌤𑍍𑌰𑌿𑌷𑍁 𑌸𑍍𑌮𑍃𑌤𑌾 ॥

என்றபடி அந்த ஸந்தியாதேவீ முற்பகலில் காயத்திரீ என்றும், நடுப்பகலில் ஸாவித்திரீ என்றும், மாலையில் ஸரஸ்வதீ என்றும் சொல்லப்படுகிறாள்.

அந்த ஸந்தியாவந்தனத்தில் உபாஸனம் (தியானம்) ஒன்றுமாத்திரம் பிரதானம் (அங்கி) என்றும், ப்ரோக்ஷணம் முதலியன அங்கம் என்றும் சிலரும்; அர்க்கியம் விடுதல், ஸந்தியாதேவியைத் தியானித்தல், காயத்திரீ ஜபம், உபஸ்தானம் (தேவதாஸ்தோத்திரம்) இந்நான்கும் பிரதானம், மற்றவை அங்கம் என்றுஞ்சொல்லி அவற்றுள் **गायत्रिया अभिमन्त्रिता आप ऊर्ध्वं विक्षिपन्ति** (காயத்ர்யா அபிமந்த்ரிதா ஆப ஊர்த்வம் விக்ஷிபந்தி) "காயத்திரியால் அபிமந்திரணஞ் செய்து (சக்திவிசேஷத்தை உண்டு பண்ணி) ஜலத்தை உயரத்தூக்கி எறிகின்றனர்" என்ற வேதம் அர்க்கியத்தை மட்டும் தனியா யுபதேசித் திருப்பதாலும், மஹாபாரதத்தில் யுத்தகாலத்தில் "பிரதானமாய்க் கூறப்படும் மற்றவைகளை அநுஷ்டிக்க முடியாவிடினும் அவற்றுள் மிகவும் முக்கியமான அர்க்கிய தானத்தை அதற்கு வேண்டிய ஜலங்கிடைக்காவிடினும் மண்ணைக் கொண்டாவது செய்தே தீரவேண்டும்" என்று உபதேசித் திருப்பதாலும், **चतुर्ष्वेतेषु अर्घ्यप्रक्षेपणं बलवत्प्रधानम्।** (சதுர்ஷ்வேதேஷு அர்க்யப்ரக்ஷேபணம் ப³லவத்ப்ரதா⁴நம்।) "முற்கூறிய நான்கு பிரதானங்களுள் அர்க்கியம் விடுதல் அதிகமுக்கியம்" என்று சிலரும் கூறுகின்றனர். ஆகவே இதுவரை சொன்னதிலிருந்து ஆசமனந் தொடங்கி அர்க்கியதானம், ஸந்தியா தேவியை த்யானித்தல், காயத்திரீ ஜபம், உபஸ்தானம் இவைகளைச்செய்து அபிவாதன மீறாகச் செய்யுங் கர்மமே "ஸந்தியா வந்தனம்" எனப் பெறப்பட்டது.

இவ்வித ஸந்தியா வந்தனத்தை த்விஜர் என்ற பிராம்மணர், க்ஷத்திரியர், வைச்யர் என மூவரும் முறையே கர்ப்பாஷ்டமம், கர்ப்பைகாதசம், கர்ப்பத்வாதசம் இந்த வயது தொடங்கி உயிருள்ளவரை காலை, நடுப்பகல், மாலை இம் மூன்று காலங்களிலும் செய்தே தீரவேண்டுமென்று சாஸ்திரங்கள் கட்டளையிடுகின்றன.

சங்கை:—उद्यन्तमस्तंयन्तमादित्यमभिध्यायन् (𑌉𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑌮𑌸𑍍𑌤𑌂𑌯𑌨𑍍𑌤𑌮𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌮𑌭𑌿𑌧𑍍𑌯𑌾𑌯𑌨𑍍) "உதயமாகின்றபொழுதும், அஸ்தமனமடைகின்றபொழுதும் சூரியனை த்யானஞ் செய்பவனாய்" என்று வேதங்கூறியதிலிருந்து காலைமாலை இரண்டுகாலங்களில் மாத்திரமே ஸந்தியானுஷ்டானத்தை ஶ்ருதி விதித்திருப்பதால் மாத்யந்தின ஸந்தியானுஷ்டானத்தையும் செய்யவேண்டுமெனச் சொன்னது எங்ஙனம்?

உத்தரம்:—ஸந்தியாவந்தனம் என்பது ஶ்ரௌதமென்றும் ஸ்மார்த்தமென்றும் இருவகைப்படும். அவற்றுள் காலைமாலைகளிற் செய்வது ஶ்ரௌதம். (ஶ்ருதியால் உபதேசிக்கப்படுவது) நடுப்பகலிற் செய்வது ஸ்மார்த்தம். (ஸ்மிருதியால் உபதேசிக்கப்படுவது) ஶ்ருதியினால் காலைமாலை இவ்விரண்டு ஸந்தியானுஷ்டானமே விதிக்கப்பட்ட போதிலும்

संध्यात्रयं न कर्तव्यं यावन्मौञ्जी निबध्यते ।
संध्यात्रयं तु कर्तव्यं सायमादि ततः परम् ॥

𑌸𑌂𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌰𑌯𑌂 𑌨 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌯𑌾𑌵𑌨𑍍𑌮𑍌𑌞𑍍𑌜𑍀 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 ।
𑌸𑌂𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌰𑌯𑌞𑍍𑌤𑍁 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌸𑌾𑌯𑌮𑌾𑌦𑌿 𑌤𑌤𑌃 𑌪𑌰𑌂 ॥

"மௌஞ்ஜீ பந்தனம் (காயத்திரீ உபதேசம்) வரை மூன்று ஸந்தியைகளையும் அனுஷ்டிக்கவேண்டாம். மௌஞ்ஜீ பந்தனத்திற்குப் பின்னர் மூன்று ஸந்தியைகளையும் ஸாயம்

ஸந்திதொடங்கிச் செய்யவேண்டும்” என கௌதமர் முதலிய மஹருஷிகள் கூறியிருப்பதிலிருந்து மாத்யந்தின ஸந்தியானுஷ்டானம் ஸ்மார்த்தமென்றும், அதையும் நாம் அனுஷ்டிக்க வேண்டுவதவசியந் தானென்றும் ஏற்படுகின்றது.

சங்கை:—உலகில் நமது வைதிக குடும்பத்தில் உபநயன தினத்தன்று மாத்தியந்தினகாலமே முன்னர்வருவதால் அதையே முதன் முதலில் தொடங்கிப்பிறகு பெரியோர் அன்றே ஸாயம் ஸந்தியையையும் உபதேசிக்கின்றனர். மேற்சொன்ன கௌதம வசனப்படியும், மற்றுமுள்ள மஹருஷிகளின் வசனப்படியும், ஸாயம் ஸந்தியையையே முதன் முதலிற் றொடங்க வேண்டுமென ஏற்படுவதால் இவ்வைதிகர்கள் இவ்விதம் செய்வது நியாயமாகுமா?

உத்தரம்—यावद्ब्रह्मोपदेशस्तु तावत्संध्यादिकं नहि ।
ततो मध्याह्नसंध्यादि सर्वं कर्म समारभेत् ॥

𑌯𑌾𑌵𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍋𑌪𑌦𑍇𑌶𑌸𑍍𑌤𑍁 𑌤𑌾𑌵𑌤𑍍𑌸𑌂𑌧𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑌂 𑌨𑌹𑌿 ।
𑌤𑌤𑍋 𑌮𑌧𑍍𑌯𑌾𑌹𑍍𑌨𑌸𑌂𑌧𑍍𑌯𑌾𑌦𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌮𑌾𑌰𑌭𑍇𑌤𑍍 ॥

“பிரும்மோப தேசமாகும் வரை ஸந்தியானுஷ்டானங் கிடையா, பிரும்மோப தேசத்திற்குப் பின்னரே அன்று மாத்யந்தின ஸந்தியானுஷ்டானந் தொடங்கி முறையே யாவையும் செய்துவர வேண்டும்” என்ற ஜைமினிவசனத்தைப் பிரமாணமாகக் கொண்டே இவ்வைதிகர் இவ்விதம் செய்து வருகின்றனர் என்று ஏற்படுகின்றது. ஆகவே பிரும்மோப தேச தினத்தன்று மாத்தியந்தின ஸந்தியானுஷ்டானந் தொடங்கி முறையே செய்யவேண்டுமென்று சொல்லியிருப்பதாலும், ஏனையருஷிகள் அன்று மாத்தியந்தின ஸந்தியானுஷ்டானங் கூடாதென்றும், அவ்விதஞ் செய்தால் பாபம்

வரும் என்றும் சொல்லாததாலும், நல்லகார்யஞ் செய்வதில் **अधिकस्याधिकं फलं भवति** (அயிகஸ்யாயிகம் ஃலும் ஹவதி) "அதிக காரியத்திற்குப் பலன் அதிகமுண்டாகும்" என்ற யுக்திப்படியும் நம் வைதிக குடும்பங்களில் அவ்விதஞ் செய்து வருகின்றனர் என்று ஏற்படுவதால் மேற்சொன்ன வாசங்கைக் கிடமில்லை.

சங்கை—மாத்யந்தின ஸந்தியாநுஷ்டானத்தை ஶ்ருதி விதிக்காததால் அதை நித்தியமெனவெண்ணிக் கட்டாயமாகச் செய்யவேண்டுவ தில்லையன்றோ?

உத்தரம்—சாஸ்திர ரஹஸ்யமறிய விருப்பமுள்ள ஆஸ்திகர்களுக்கு முதலிற் சமாதானங்கூறுவாம். பிரத்யக்ஷ ஶ்ருதி சித்தமென்றும், அநுமிதஶ்ருதி சித்தமென்றும் கர்மம் இருவகைப்படும். அவற்றுள் காலை மாலை ஸந்தியாநுஷ்டானம் **अहरहस्संध्यामुपासीत** (அஹரஹ ஸ்ஸந்த்யாமுபாஸீத) என்ற பிரத்தியக்ஷ ஶ்ருதியால் விதிக்கப்பட்டிருப்பதால் பிரத்யக்ஷ ஶ்ருதி ஸித்தமெனப்படும். மஹருஷிவசனங்களைக் கொண்டு அதற்குமூல ஶ்ருதியிருப்பதாகவே ஊஹித்து ஸ்மிருதியாற் சொல்லப்பட்டதும் ஶ்ருதியாற் சொல்லப்பட்டதே என்று கொள்ளப்படுவதே அநுமித ஶ்ருதி ஸித்தமெனப்படும். ஆதலால் ஸ்மிருதிவசனங்களே மாத்தியந்தின ஸந்தியாநுஷ்டானத்தை விதித்திருப்பினும் அதுவும் அநுமிதஶ்ருதி சித்தமாயாகின்றது பற்றி ஶ்ரௌதமாகவே ஏற்படுகின்றது. அத்துடன் ஸந்தியாநுஷ்டானத்திற்கு வேண்டிய யோக்யதையையடைந்த பின்னர் ஒரு ஸந்தியாநுஷ்டானத்தைக்கூட விட்டுவிட மனமில்லாத ஜைமினியானவர் 'பிரும்மோபதேச தினத்தன்றே மாத்தியந்தின ஸந்தியாநுஷ்டானத்தைச் செய்யத்தொடங்குக' என்று விதித்தார்.

**शास्त्रं हि वत्सलतरं मातापितृसहस्रतः।**

பராத்ரும் ஹி வக்ஷஸ்ருதரும் ஊதாவிதரஸஹஸ்ரதஃ ।

"ஆயிரம் மாதாபிதாவினும் சாஸ்திரமானது ஜீவனி டத்தில் நிரம்பவும் பிரேமையுள்ளதன்றோ?" என்று பெரி யோர் கூறியபடி அந்த ஸந்தியாநுஷ்டானத்தையும் நாம் செய்வதால் அதிகம் குணமல்லவோ ஏற்படும்! இரண்டாவ து ஸமாதானமாவது:—ஸத்கர்மானுஷ்டானத்தில்ஶ்ரத்தை யில்லாது வீணில் ஆக்ஷேபஞ் செய்கின்றவனுக்கு ஶ்ருதி சொல்லுவதும், ஸ்மிருதி சொல்லுவதும் ஒன்றுதானாயினும் கௌதமர், வியாஸர், பிரசேதஸ், மற்றும்பல ஸ்மிருதிக்காரர் கள் பிரும்மோபதேச தினத்தன்று ஸாயம் ஸந்தியானுஷ்டா னத்தையே முதன் முதலிற் றொடங்க வேண்டுமென்று சொல்லி யிருப்பதாலும், ஜைமினியொருவரே மாத்தியந்தின ஸந்தியானுஷ்டானத்தை முதலில் விதித்திருப்பதாலும், அநேகர் சொல்லுகிறபடியே செய்வது நலமென்று ஒருவ னது மனது ஆஸ்திக்யத்துடன் உறுதி செய்யுமாயின் அவ் விதம் செய்வதில் தவறு யாதுமில்லை என்றே எண்ண இட மிருக்கிறது.

சங்கை—ஒவ்வொரு பிராம்மணனுக்கும் 8வது வயதில் பிரும்மோபதேசஞ் செய்வித்து அது முதலே ஸந்தியானுஷ் டானஞ்செய்யவேண்டுமென விதித்த சாஸ்திரத்தின் கருத்து என்னை?

உத்தரம்:—அதனுண்மையை இங்கு கூறுவாம். **जाय-मानोहवै ब्राह्मणः त्रिभिः ऋणवा जायते ब्रह्मचर्येण ऋषिभ्यो यज्ञेन देवेभ्यः प्रजया पितृभ्यः** (ஜாயமானோஹவை ப்ராஹ்மணஃ த்ரிபிஃ ருணவா ஜாயதெ ப்ரஹ்மசர்யேண ருஷிப்யோ யஜ்ஞேந தெவெப்யஃ ப்ரஜயா பித்ருப்யஃ)" ஜன்ம மெடுக்கும் பிராம்ம ணன் மூன்று கடைமைகளாற் கடனுள்ளவனாகவே ஜனிக்கி

ருன். அக்கடன்களுள் பிரும்மசரியத்தால் ருஷிகளின் கடனையும், பிரஜையினுல் பிதுருக்களின் கடனையும், யாகத்தால் தேவர்களின் கடனையும் போக்கக் கடவன்" என்ற வேத மொழிப்படியும்,

**ऋणानि त्रीण्यपाकृत्य मनो मोक्षे निवेशयेत् ।**
**अनपाकृत्य मोक्षं तु सेवमानः पतत्यधः ॥**

𑌋𑌣𑌾𑌨𑌿 𑌤𑍍𑌰𑍀𑌣𑍍𑌯𑌪𑌾𑌕𑍃𑌤𑍍𑌯 𑌮𑌨𑍋 𑌮𑍋𑌕𑍍𑌷𑍇 𑌨𑌿𑌵𑍇𑌶𑌯𑍇𑌤𑍍 ।
𑌅𑌨𑌪𑌾𑌕𑍃𑌤𑍍𑌯 𑌮𑍋𑌕𑍍𑌷𑌂 𑌤𑍁 𑌸𑍇𑌵𑌮𑌾𑌨𑌃 𑌪𑌤𑌤𑍍𑌯𑌧𑌃 ॥

"முக்கடனையும் விலக்கியே மோக்ஷத்தில் மனதைச் செலுத்தல் வேண்டும். முக்கடனையும் விலக்காது மோக்ஷத்தையடைய விருப்பமுள்ளவன் கீழ்விழுந்து விடுவான் (நரகத்தையடைவான்)" என்ற மகான்களின் திருமொழிப்படியும் ஜன்மமெடுத்த ஒவ்வொரு பிராம்மணனும் முக்கடனையும் விலக்கியே தீரவேண்டுமென்று ஏற்படுகின்றது. அவற்றுள் முதன்மையான ருஷிகளின் கடனை விலக்குவதென்பது முழுமுதற் கடவுளான ஸ்ரீமந் நாராயணன் தொடங்கி மனு முதலிய மஹருஷிகளின் பரம்பரையாய்த் தொண்டுதொட்டு நாளிதுவரை குருசீடபரம்பரையாய் வருகின்ற வேதத்தைக் கற்பதேயாம்.

சங்கை :—**ब्रह्मचर्येण ऋषिभ्यः** (𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑍇𑌣 𑌋𑌷𑌿𑌭𑍍𑌯𑌃). "பிரும்மசரியத்தைக் கைக் கொள்வதால் ருஷிகளின் கடனைத் தீர்க்கவேண்டும்" என்று மட்டுமே சொல்லப்படுவதாலும், **ब्रह्मचर्य** (𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯)என்றபதத்திற்கு பிரும்ம=வேதத்தை, சர்ய=கற்பதற்காக வேண்டிய நியமம் (விரதம்) என்று பொருள் ஏற்படுவதாலும், வேதத்தைக் கற்பதால் ருஷிக் கடன் தீர்க்கப் படவேண்டுமென்பது எங்ஙனம் ?

உத்தரம்—பிரும்மசரியம் என்ற பதத்திற்கு பிரும்ம=வேதத்தை, சர=கற்குங்கால், ய=அதைக் கற்பிக்கும் தனது

ஆசானுக்கும், அவனாற் கற்பிக்கப்படும் வேதபாகத்திற்கும் தனது முன்னேற்றத்திற்கும் தக்கபடி சீடன் செய்யவேண்டிய கடமைகளை (விரதங்களை) பொருள் எனப் பெரியோர் கூறியிருக் கின்றனர். ஆகவே ब्रह्मचर्येण (ப்ரஹ்மசர்யேண) பிரும்மசரியத்தா லென்றால் வேதத்தைக் கற்பதால் என்ற பொருளுந் தொக்கி நிற்கின்றமையின் பிரும்மசரியத்தால் ருஷிகளின் கடனைத் தீர்க்கவேண்டு மென்று சொன்னதில் யாதும் தோஷமில்லை.

சங்கை—ஒருவனிடமிருந்து ஒருபொருளைத் தனக்கு வேண்டிய ஸமயத்தில் பெற்றுக் கொண்டவன் எவனோ அவனேகடன் வாங்கினவன் என்றும், அவனால் வாங்கப்பட்ட பொருளே கடன் வஸ்து வென்றும் உலகில் வழங்கி வருவது பிரசித்தம். அவ்வித மிருக்க அதற்கு மாறாக இந்த விடத்தில் ருஷிகளிடமிருந்து நாம் ஒன்றையும் பெறுமுன்னரே நம்மைக் கடன் காரர்களாகச் சொன்னது எங்ஙனம்?

உத்தரம்:—ஒருவன் தக்க நாணய முள்ள ஒருவனிடம் வட்டிக்குப் பணத்தைக் கொடுக்கும் பொழுது குறித்த கெடுவில் பணத்தைக் கொடுத்து விட வேண்டுமென எழுதி வாங்கிப் பணத்தை கொடுக்கிறான் என்றே வைத்துக் கொள்வோம். பணத்தை வாங்கினவன் குறித்த கெடுவிற்குள் பணக்காரனிடம் தான் வாங்கின பணத்தைத் திருப்பிக் கொடுக்குங்கால் கடன் கொடுத்தவன் அதை வாங்கிக் கொள்ளத் தாமதிப்பானேல் பணம் வாங்கினவன் கடன் கொடுத்தவனை நோக்கி "கடன்காரன். நாம் தருகிறோ மென்றாலும் வாங்கிக்கொள்ளுகிறான் இல்லையே. என் செய்வோம். இக்கடன்காரன் தொல்லையே பெருந்தொல்லையாகி விட்டதே" என்று சொல்லும் உலகவார்த்தையை அறியாதாரு முளரோ! இங்கு பணத்தைப் பெற்றுக் கொண்டவன் திருப்பிக்

கொடுக்கத் தயாராகவிருக்கும் பொழுதும் வாங்க வேண்டிய வன் அதை வாங்கத் தவறினபடியால் அவன் கடன்காரன் என்றே எண்ணப்படுவது போலவே பகவதாக்ஞாரூபமான வேததனத்தை நம்மிடங் கொடுக்கத்தயாராக விருக்கும் பொழுது அதைவாங்கி (கற்றுக்) கொள்ளக்கடமைப் பட்ட நாம் வாங்காவிடில் அம்மஹர்ஷிகள் விஷயத்திற்கடன்காரர் களே யாகின்றோம் என்பதில் யாதும் ஆக்ஷேபமுண்டோ! ஆனது பற்றியே "பிரும்மசர்யத்தால் ருஷிக் கடனைத் தீர்க் கவேண்டும்" என சாஸ்திரம் கூறினதாகச் சொல்லப் பட்டது.

மேலும் வடமொழியில் **ऋण** (ருண) என்ற பதத்திற்கு **अवश्य देयद्रव्यम्** (அவஶ்யதெய த்ரவ்யம்) "கட்டாயம் கொடுக்க வேண்டிய பொருள்" எனப்பொருள் கொள்ளப்படுவதால் பகவதாக்ஞையை யொட்டி நம்மிடம் கட்டாயம் ஒப்படைக் கும்படி கிடைத்த வேத ரூபமான தனத்தை மகருஷிகள் வைத்துக் காத்துக்கொண்டிருப்பதால் அதை நாம் வாங்கா விடில் அவர்கள் விஷயத்தில் கடன்காரர்களாகவே ஆகின் றோம் எனச் சாஸ்திரங் கூறிற்று. இங்கு லோகானு பவமொன்று கூறுவாம். ஒருவன் தன்னிடமுள்ள சொத் துக்களைப் போதுமான வயது வந்ததும் தனது புத்திரனி டங் கொடுத்துவிடும்படி தனது நண்பனிடங் கொடுத்து தேசாந்தரஞ் சென்றான் என்று வைத்துக்கொள்வோம். அந்நண்பன் தன்னிடம் சொத்தை ஒப்படைத்தவனின் புத்தி ரனுக்குப் போதுமான வயது வந்ததும் அப்புத்திரன் அதைத் தன்னிடமிருந்து பெற்றுக்கொள்ளாவிடில் அப்பை யனை நோக்கி "கடன்காரன். என்னிடமுள்ள பொருளை வாங்கிக்கொள்ளாமலிருக்கின்றானே! இதற்கு நான் என்ன செய்வேன். இக்கடன்காரன் தொல்லையே அதிகமாகிவிட்

டது. இவனது பிதாவின் கட்டளைப்படி இவனது சொத்தைத் திரும்பவும் இவனிடம் கொடுத்து என்றைக்குச் சுகமாய் நமது காரியத்தைக் கவனிப்பது" என்று ஒரு யோக்யனை மனிதன் கவலைப்படுவதை நாம் உலகில் கண்டிருக்கின்றோமன்றோ! அதுபோலவே ஸர்வலோக பிதாவான ஸ்ரீமந்நாராயணன் தமது ஆக்ஞாரூபமும் உயிர்களுஜ்ஜீவிப்பதற்கு உத்தமஸாதனமுமான வேத தனத்தைத் தன்போன்ற மஹருஷிகளிடத்திற் கொடுத்து வைத்திருக்கின்றார். ஆகலின் நாம் நமது பிதாவின் சொத்தான வேத தனத்தை அவர்களிடமிருந்து பெறுவிடில் நம்மை மஹருஷிகள் கடன்காரன் என்றே எண்ணுவார்கள் என்பதில் ஐயமுண்டோ! ஆனதுபற்றியே குருபரம்பரையாய் முறைப்படி அதைப்பெற்று அக்கடனை விலக்கவேண்டுமென சாஸ்திரங்கள் கூறின.

சங்கை:—உலகில் வேதத்தைக் கற்போர் யாவரும் ருஷிகளிடமிருந்து கற்றலன்றோ மேற்கூறியது பொருந்தும். அவ்விதமல்லாது யாதோ ஒருவனிடமிருந்து தானே நாம் அதைப் பெறுகின்றோம். அவ்விதமிருக்க இதிலிருந்து ருஷிக்கடன் தீர்ந்ததாக நினைப்பது எங்ஙனம்?

உத்தரம்:—வேதமென்பது ஸ்வரம், வர்ணம், ஆநுபூர்வி (தொடர்ச்சி) இவைகளுடன் "ஒருவர் சொல்ல மற்றவர் கேட்க" என்ற முறையையுடையதாக லோககர்த்தாவான ஸ்ரீமந்நாராயணன் றொடங்கி நமது ஆசானீறாக வருவதாலும், ஆனதுபற்றியே இதற்கு "அநுஶ்ரவம்" (குருவின் உச்சாரணத்தை யொட்டிச் சீடனும் உச்சரித்துப் பெறப்படுவது) என்று மற்றுமோர் பெயரிடப்பட்டிருப்பதாலும், அவ்வித வேதத்தை முறைப்படி சீடனுக்குக் கற்பிக்கும் ஆசானே ருஷி எனப்படுவான். ஆனதுபற்றி அவ்வாசானி

டமிருந்து கற்பதே ருஷியினிடமிருந்து கற்பதாகின்றமை யின் அவ்விதங் கற்றலாலேயே ருஷியின் (மந்திரோபதேசஞ் செய்யக் கடமைப்பட்டவரின்) கடனைச் செலுத்தினவர் களாக நாமாகின்றோம். இவ்விதம் வேதத்தைக் கற்றல் மூலம் ருஷிக்கடனைத்தீர்க்கவேண்டியவர்களாக நாமிருப் பதால் அதைப் பெறுவதற்குரிய யோக்யதையைத் தேடிக் கொள்வது அவச்யமாகின்றது. மேலும் வேதத்தை ஆசா னிடமிருந்து கற்கக்கடமைப்பட்ட ஒவ்வொரு ஜீவனும் பிதாவின் சுக்கிலத்திற்றங்கி அதினின்றும் தாயின் கற்பக் குழியில்பல்மாதங்கள் துன்புற்று அங்கிருந்து ஆண்டவனரு ளால் வெளிவருகின்றான். அவ்விதம் தாயின் கர்ப்பத்தில் வஸிக்கும்பொழுது கர்ப்பாசயத்திலுள்ள மலம், ஜலம் முத லியவற்றால் நனைவுற்று அசுத்தியையடைந்திருப்பதாலும்,கா ர்ப்பத்தினின்று வெளிவந்தபிறகும் சுமார் 8 வயதுவரை அசுத்தமான ஆஹாரவிபவஹாரமுள்ள வனுய்ப்பெரும் பாலு மிருப்பதாலும் ஒவ்வொரு ஜீவனுக்கும் இயற்கையில் நேரககூடிய அசுத்தியைப்போக்கியே மிக்கப் பரிசுத்தமான தும், ஸ்ரீமந்நாராயணன் றொடங்கி நமது ஆசானீறாக ஸ்வர, வர்ண, ஆனுபூர்வியுடன் தொடர்ச்சியாக வருகின்றதும், அறம், பொருள், இன்பம் என்றபுருஷார்த்தங்களை அடை தற்குரிய உத்தமஸாதனங்களைப் போதிக்கின்றதும், முடி வில் இப்பிறவிக் கடலினின்றும் கரையேறுதற்குரிய ஆத்மக் ஞானத்தை உபதேசிக்கின்றதுமான இந்த வேதத்தைக் கற்கவேண்டுவதவசியமாகின்றது. இவ்விதமே,

गार्भैर्होमैर्जातकर्मचौलमौञ्जीनिबंधनैः ।
गार्भिकं बैजिकं चैनो द्विजानामपमृज्यते ॥

கா₃ர்பை₄ர்ஹோமைர்ஜாதகர்மசௌளமௌஞ்ஜீநிப₃ந்த₄நை:।
கா₃ர்பி₄கம் பை₃ஜிகம் சைநோ த்₃விஜாநாமபம்ருஜ்யதே ॥

"த்விஜர்கட்குக் கர்ப்பவாஸத்தாலும், பிதாவின் பீஜ ஸம்பந்தத்தாலும் நேரும் தோஷமானது, பும்ஸவனம், ஸீமந்தகாலத்திய ஹோமம் இவற்ருலும், ஜாதகர்மம், சவுளம், மௌஞ்ஜீபந்தனம் இவற்றின் ஹோமத்தாலும் போக்கப்படுகிறது" என்று மனுவும் சொல்லியிருக்கிருர். ஆகவே மேற்சொல்லிய ஜாதகர்மம், மௌஞ்ஜீபந்தனம் முதலிய ஸம்ஸ்காரங்களால் தோஷத்தை வில்க்கினபிறகே காயத்திரீ முதலிய மஹா மந்திரோபதேசம் பெறல் வேண்டும். அவ்விதம் காயத்திரியின் உபதேசம் பெற்றவனே த்விஜன் எனப்படுவன்.

ब्राह्मण्यां ब्राह्मणाज्जातः ब्राह्मणः परिकीर्तितः ।

ப்ராஹ்மண்யாம் ப்ராஹ்மணாஜ்ஜாத: ப்ராஹ்மண: பரிகீர்த்தித: ।

என்றபடி பிராம்மண ஸ்திரீயினிடத்து பிராம்மணனான புமானுக்குண்டானவன் பிராம்மணன் எனப்படுவானு பினும்.

जन्मना जायते शूद्रः कर्मणा जायते द्विजः ॥
मातुरग्रेऽधिजननं द्वितीयं मौञ्जिबंधनात् ।
तत्रास्य माता सावित्री पितात्वाचार्य उच्यते ॥

ஜந்மநா ஜாயதே ஶூத்ர: கர்மணா ஜாயதே த்விஜ: ॥
மாதுரக்ரேऽதிஜநநம் த்விதீயம் மௌஞ்ஜிபந்தநாத் ।
தத்ராஸ்ய மாதா ஸாவித்ரீ பிதாத்வாசார்ய உச்யதே ॥

"பிராம்மண ஜாதியைச் சேர்ந்த ஸ்திரீயினிடம் பிராம்மணவகுப்பைச் சேர்ந்த புருஷனுக்குப் பிறந்ததால் மட்டுமே வேதத்தைக் கற்பதற்குரிய யோக்கியதை அவனுக்கு வந்துவிடுவதில்லை. முதலில் வேதத்தைக்கற்கும் விஷயத்தில் சூத்திரன்போலவே அதிகாரமற்றவனுகின்ருன். பிரும்மோபதேசம் என்ற ஸம்ஸ்காரத்தாலேயே த்விஜன் என்றபெயரை

யடைந்து வேதோபதேசம் பெறுவதற்குரிய யோக்யதை யையடைகின்றான். தாயினிடமிருந்துண்டாவது முதற் பிறவி என்றும், ஸாவித்திரீ (காயத்திரீ) உபதேசத்தாலுண் டாவது இரண்டாவது பிறவி என்றும், இவனுக்கிங்கு ஆசா னே பிதாவென்றும் ஸாவித்திரியே மாதாவென்றும் சொல் லப்படும்” என்ற மனு வசனப்படி காயத்திரீ உபதேசத் திற்குப் பின்னரே ஒவ்வொரு த்விஜனும் குருவினிடமிருந்து முறைப்படி வேதத்தைக் கற்று அதன்படி ஒழுகி அதன் மூலம் ஸர்வலோக பிதாவன ஸ்ரீமந்நாராயணனுடைய அரு ளைப் பெறவேண்டியவனாயிருக்கின்றான். இங்ஙனமிருத்த லாலேயே வேதத்தைக் கற்குமுன்னர் ※ ஜாதிப் பிராம்மண மாபினுதித்தோர் யாவரும் காயத்திரீ உபதேசம்பெற்றும், அதை ஒவ்வொருதினமும் முறைப்படி அனுஷ்டித்தும் அதற்குப் பின்னர் முறைப்படி வேதத்தை ஓதியும் வருகின் றனர்.

சங்கை:—இதுவரை கூறியதிலிருந்து வேதத்தைக் கற்பவர் எவரோ அவரே காயத்திரீ உபதேசம் பெறவேண்டு மென்று ஏற்படுகின்றது. இக்காலத்திலோ வேறு பல கார ணங்களால் பெரும்பாலும் ஏனைய வித்தைகளைக் கற்கவேண் டியவர்களாகவோ, கற்கின்றவர்களாகவோ இருக்கும் நமக்கு இந்தக் காயத்திரீ உபதேசம் அவசியமில்லை என்று ஏன் கொள்ளக்கூடாது?

---

※ பிராம்மண்யம் முதலிய ஜாதியானது பிறவியிலேற்பட்ட தா? இடையிற் றெழிற்குணங்களாலுண்டாவதா வென்பதைப் பலர்பலவாறு கூறுகின்றனர். ஆயினும் ஜாதி பிறவியிலேற்பட்ட தேயன்றி இடையிற்றெழிற்குணம் முதலியவற்றால் உண்டாகக் கூடியதல்லவென்பதை நமது ‘ஜாதிநிர்ணயம்’ என்ற உபன்யாஸத் திற் கண்டுதெளிக.

உ.த்தரம்:—இதற்கு இரண்டுவிதமாக ஸமாதானங்கூறுவாம். ஒன்று—சுயநலங் கருதாது உலகக்ஷேமத்திற்கென்றே தமது வாழ்நாளைச் செலவுசெய்து பாடுபட்ட மஹான்களான மஹருஷிகள் "ஸந்தியானுஷ்டானத்தை முன்னிட்டு நியமத்துடன் வேதமந்திரங்களை ஆசானிடமிருந்து கற்று அதன்படி ஒழுகி வருவாயேல் அவ்வொழுக்க மஹிமையால்இம்மையில் ஆரோக்யம்,பாக்கியம்,புத்திரன் பௌத்திரன் முதலிய ஸந்தானம் இவைகளுடன் வாழ்ந்தும், வேதத்தைக்கற்குங்காலனுஷ்டித்த பிரும்மசரியப்பிரபாவத்தால் முறையே சித்தசுத்தி, வைராக்யம் முதலியவற்றையடைந்தும் அதன் வாயிலாக பகவத்தியானம் முதலிய உ.த்தம ஸாதனுனுஷ்டான மஹிமையால் மேலான பதவியைப்பெறுவாயாக" என்று இஷ்டன் போலுபதேசித்திருக்க நாம் அதைவிடுத்து ஏனையவித்தைகளைப் படித்து ஸகலத்தையுமிழந்து நீடித்த ரோகிகளாகவும், அற்பாயுளையுடையவர்களாகவும், தரித்திரர்களாகவும் சாசுவதமான அடிமைத்தனமுள்ளவர்களாகவுமாவோமென்றால் அந்தத்தோஷம் ருஷிகளைச்சேர்ந்ததாகுமா? அவர்கள் சொன்னபடி அனுஷ்டிக்காததால் அம்மஹான்களுக்கு யாதானும் குறைவுதானுண்டாகுமோ! ஆகவே பகவதாக்ஞா ரூபமான வேதத்தைக்கற்காது விடுத்து வேறுவித்தையைப் படிப்பவர்க்கு ஸந்தியானுஷ்டானம் வேண்டியதில்லை என்று சொல்லும் வாதத்திற்கு வேதத்தைக்கற்கவேண்டுவதவச்யமென்றும், அவ்விதம் வேதத்தைக் கற்கத்தொடங்குமுன்னர் காயத்திரீ உபதேசம் முதலிய ஸம்ஸ்காரங்களைப் பெற்றே தீரவேண்டுமென்றும் இதினின்றும் பெறப்பட்டது. இரண்டாவது ஸமாதானம்:—

**परिहाप्यापि वेदांस्त्रीन् साङ्गांश्च सपदक्रमान् ।**
**गायत्रीमात्रसारोऽपि वरो विप्रो नसंशयः ॥**

𑌪𑌰𑌿𑌹𑌾𑌪𑍍𑌯𑌾𑌪𑌿 𑌵𑍇𑌦𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌨𑍍 𑌸𑌾𑌙𑍍𑌗𑌾𑌂𑌶𑍍𑌚 𑌸𑌪𑌦𑌕𑍍𑌰𑌮𑌾𑌨𑍍 ।
𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍀𑌮𑌾𑌤𑍍𑌰𑌸𑌾𑌰𑍋𑌽𑌪𑌿 𑌵𑌰𑍋 𑌵𑌿𑌪𑍍𑌰𑍋 𑌨𑌸𑌂𑌶𑌯𑌃 ॥

"சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், ஜ்யோதிஷம் நிருக்தம் முதலிய அங்கங்களுடனும், பதம், கிரமம் இவைகளுடனும் (அவசியங் கற்கவேண்டிய) மூன்று வேதங்களையும் ஒருவன் கற்காவிடினும், காயத்திரியை மட்டுமாவது வலுவாகக்கைக் கொண்டானேல் மேலான பிராம்மணனாகின்றான். இதில் யாதும் ஸந்தேஹமில்லை" என்ற வசனப்படி வேதமாதாவும், வேதத்திற் சேர்ந்ததுமான இந்த காயத்திரியை அர்த்தானுஸந்தானத்துடன் ஜபித்து வருவதால் ஸர்வக்ஷேமத்தையுமடையலாமென்று ஏற்படுவதால் வேதாத்யயனஞ் செய்யாதவனும் இதைமட்டுமாவது ஜபித்தே வரவேண்டுமென்பது அவசியமாகின்றது. மேலும் காயத்திரீ மந்திரோபதேசம்பெற்றவனே வேதத்தைக் கற்கத்தகுதியுள்ளவனாக ஆகின்றான் என்றுமட்டும் அதன் கருத்தேயன்றி வேதத்தைக் கற்கின்றவன் தான் காயத்திரியை ஜபிக்கவேண்டுமென்று சொன்னதாகக் கொள்ளுதல் கூடாது. அஃதுடன்.

**ऋषयो दीर्घसंध्यत्वादायुर्दीर्घमवाप्नुयुः ।**
**प्रज्ञां यशश्च कीर्तिं च ब्रह्मवर्चसमेवच ॥**

𑌋𑌷𑌯𑍋 𑌦𑍀𑌰𑍍𑌘𑌸𑌂𑌧𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌦𑌾𑌯𑍁𑌰𑍍𑌦𑍀𑌰𑍍𑌘𑌮𑌵𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑍁𑌃 ।
𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌂 𑌯𑌶𑌶𑍍𑌚 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌂 𑌚 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌰𑍍𑌚𑌸𑌮𑍇𑌵𑌚 ॥

"ருஷிகள் நீண்டகாலம் ஸந்தியானுஷ்டானஞ் செய்ததால்தான் நீண்டஆயுள், நல்லஅறிவு, கீர்த்தி, யசஸ், பிரும்ம

தேஜஸ் இவைகளை அடைந்தனர்" என்ற மனுவசனப்படி இத்தகைய ஸந்தியானுஷ்டானத்தால் ஆயுர்விருத்தி, நல்ல அறிவு, நற்கீர்த்தி, பிரும்மதேஜஸ் (பிராம்மண ஜாதிக்குரிய நிக்கிரஹ அனுக்கிரஹசக்தி) இவைகளையடைந்து க்ஷேமத்தையடையலாமென்றும் வெளியாவதால் வேதாத்யயனம் செய்யாதவனும் காயத்திரீ உபதேசம் பெறவேண்டுவதவசியமென்றும், அவ்விதகாயத்திரி ஜபத்தால் மட்டுமே எண்ணிறந்தபயன் இவனுக்குண்டாவது நிச்சயமென்றும், அவ்விதமே நமது தேசத்தில் நாளிதுவரை மஹான்கள் அவற்றை அடைந்தும் வந்தனர் என்றும் நாம் அதை இழந்ததாலேயே எதற்கும் சக்தியற்றவர்களாகவும், மஹாமூடர்களும் கண்டு நகைக்கக்கூடிய நிலைமை பெற்றவர்களாகவும் இருக்கின்றோமென்றும் தெளிவாய் ஏற்படுகின்றது.

இங்கு நங்குலத்துதித்த பெரியோரால் நேரிலனுபவித்ததாக நமக்குச் சொல்லப்பட்ட லோகானுபவமொன்று கூறுவாம். அதாவது:—ஒரு ஊரில் ஒரு பிராம்மணனுக்கு பிரும்மராக்ஷஸம் என்ற பிசாசம் பிடிக்க அதுகாரணம் பற்றி அந்தப்பிராம்மணர் எவருக்கு மடங்காது பிசாசம் பிடித்தவனுக்குரிய முறைப்படியெல்லாம் நடந்துவருங்காலையில் ஒருஸமயம் தாம் வைதிககாரியத்தை முன்னிட்டு அவ்வூர்சென்று வசிக்கும்பொழுது அவ்வூரில் யாதோ ஒரு வேதியர் வெளிப்பார்வைக்கு ஸாமான்யமான தோற்றமுடையவராய் வீடுவீடாய் சென்று பிக்ஷை எடுத்துவரும் ஸந்தர்ப்பத்தில் பிரும்மராக்ஷஸன் என்ற பிசாசம்பிடித்த பிராம்மணன் வீட்டண்டை வருங்காலையில் இதுகாறும் எவ்வளவோ எண்ணிறந்த மந்திரவாதிகளைக்கொண்டு மந்தி

ரப்பிரயோகஞ் செய்தும் எதற்கு மஞ்சாது அந்தந்த மாந்திரிகர்களைப் பரிஹஸித்தும் தான் செய்யும் முறையையே விடாதுசெய்தும் வந்த அப்பிசாசம்பிடித்தவன் இவ்வேழை வேதியர் தான்வசிக்கும் வீட்டின் வாயிற்படியில் அடிவைத்ததும் "அந்தோ! உடம்பு எரிகின்றதே! இப்பாபியை இங்கு எவர் வரும்படிசெய்தவர். நான் ஓடிவிடுகின்றேன்" என்று பலவாறு கூக்குரலிடவே அவ்வூர் ஜனங்களெல்லாம் உடனே ஓடோடியும்வந்து கூட்டமாகக்கூடி அவ்வேழை வேதியரைநோக்கி ஸ்வாமிகாள்! தாங்கள் மஹா மந்திரவாதிகளெனத்தோன்றுகிறது. ஆகையாற் றுங்கள் இப்பிராம்மணனுக்குப் பிடித்திருக்கும் பிரும்மராக்ஷஸத்தைப் போக்கி இவனது குடும்பத்தை கார்ப்பதுடன் இவ்வூரையே கார்க்கவேண்டுமென அவரை வேண்டிக்கொள்ளவே உடனே அவ்வேழை வேதியர் "ஓ கிராமவாஸிகளே! நான் மந்திரவாதியுமல்லன், செப்பிடுவித்தைகாரனுமல்லன். எனக்கு ஒன்றும்தெரியாது. வேதாத்யயனங்கூட நான் முற்றிலும் பண்ணியதில்லை. உபநயனமானது முதற் றவறாது எனது பிதா முதலியவர்களானுபதேசிக்கப்பெற்றபடி ஒவ்வொரு தினமும் ஸந்தியானுஷ்டானஞ்செய்து ஆயிரம் ஆவிருத்தி காயத்திரீஜபஞ் செய்துவருகின்றேன். இதுதான் எனக்குத்தெரியும்" எனவே அதுகேட்ட அக்கிராமவாஸிகள் அவர் என்னசொல்லியும் அவரை விடாது வேண்டத்தொடங்கினர். உடனே அவ்வேழைவேதியர் ஒருமாறு தன் மனதைத் தேற்றிக்கொண்டு பிரும்மராக்ஷஸம்பிடித்த அப்பிராம்மணனைநோக்கி "அடா! நீ இந்தப்பிராம்மணனை விட்டுப்போகவேண்டும்; இதற்கு என்னசொல்லுகிறாய்" என்று கேட்கவே பிராம்மண சரீரத்திலுள்ள அப்பிசாசமா

னது "நான்போகிறேன், போகிறேன்" என்று சொல்லவே அச்சமயம் அங்கிருந்த அக்கிராமவாசிகள் இவ்வேழைவேதியனைநோக்கிச் சொன்னதாவது:—" ஓ சுவாமிகாள்! இப் பிசாசம் போய்விடுவது உண்மையானால் இவ்வூர் ஆற்றின் கரையிலுள்ள ஒருபெரிய அரசின்கிளையானது சமீபத்திலடித்த புயற்காற்றால் ஆற்றில் முறிந்து விழுந்து கிடைக்கின்றது; இதை இப்பிசாசம் ஒருவரும் அறியாது தூக்கிப்போட்டு விட்டாற்றான் இப்பிசாசம் இவனை விட்டுப் போனதாக நாங்கள் நம்பக்கூடும். ஆகையாற்றுங்கள் அவ் விதஞ் செய்யும்படி இதற்குக்கட்டளையிடவேண்டும்" என்பதேயாம் பிறகு அவ்விதமே அவ்வேழைவேதியரும் கட்டளையிட அன்றிரவே ஆற்றில் விழுந்து கிடந்ததும், சுமார் 200 ஜனங்கள் சேர்ந்துப் பெரட்டக்கூடியதுமான அரசின்கிளையானது காலையில் அவ்வூரார் நதிக்கு வருவதற்குமுன்னதாகவே கரையிற் கொண்டு சேர்க்கப்பட்டிருந்தது. அதைமறுநாள் நதியில் ஸ்நானஞ் செய்யச்சென்றிருந்த நானும், அவ்வூர்வாசிகளும், அவ்வேழை வேதியரும் கண்கூடாகக்கண்டு ஆச்சரியமடையுந் தருணத்தில் அவ்வேழைவேதியர் அக்கிராமவாசிகளை நோக்கி "ஓ கிராமவாசிகளே! நீங்கள் இப் பிசாசத்திற்குப் பயப்படவேண்டாம். அது இப்பக்கமே இனிவராது" என்று சொல்லிப் பின்னர் சொன்னதாவது:—" நான் ஒரு ஏழைப்பிரும்மசாரிப் பிராம்மணன். முறைப்படி காயத்ரீ ஜபஞ்செய்ததைத் தவிர்த்து வேறு எதையும் அறியேன். நீங்களும், இப்பிசாசம்பிடித்த பிராம்மணனும் உபதேசமுறை தவறாதுமட்டும் காயத்திரியை ஜபித்து வந்திருந்தால் இக்கஷ்டம் வந்திருக்குமா வென்பதைக் கவனித்துப்பார்த்து இனியாவது காயத்திரியை ஜபித்

துவாருங்கள். இவ்விதகாயத்திரீ ஜபத்தின் மஹிமையாலன்றோ விசுவாமித்திரர் வசிஷ்டர் முதலிய மகருஷிகள் சக்கிரவர்த்திகளும் கண்டு நடுங்கக்கூடிய மேலானநிலையை அடைந்தனர் என்பதைப் புராணங்ளெவாயிலாக நான்பலதடவை கேட்டிருக்கிறேன்" என்று சொல்லி அவர் வேறு ஊர் சென்றார். அதுமுதற்கொண்டு அவ்வூர்வாசிகள் யாவரும் ஸந்தியானுஷ்டானத்தை முறைதவறாது செய்துவந்தனர். நானும் அதற்குப்பின்னரே மிக்கஊக்கத்துடன் காயத்திரியை ஜபிக்கவாரம்பித்தேன். மேற்சொன்னதை நான் நேரில் கண்கூடாகக்கண்டிருப்பதால் இதிற் சந்தேகங் கொள்ளாது இவ்விதமே செய்துவருவாயாக வென்று எனக்கும் உபதேசித்தார் என்பதேயாம். *

ஆகவே மனுவசனத்திற் சொல்லிய ब्रह्मवर्चसमेवच (ஃரு ஹவசஸமெவ ச) பிராம்மணனுக்குரிய நிக்கிரஹானுக்கிரஹசக்தியை காயத்திரீஜப மாத்திரத்தால் நந்தேயத்திற் பலர் அடைந்திருக்கின்றனர். ஆதல்பற்றி வேதாத்யயனஞ்செய்யாதநாம் எதற்குக்காயத்திரீ ஜபஞ்செய்யவேண்டுமென்றவீண் வாதத்தை விடுத்து மேற்கண்ட நிக்கிரஹானுக்கிரஹ சக்திரூபமான பிரும்மவர்ச்சஸ்ஸைத்தரத்தக்க ஸந்தியானுஷ்டானத்தை முறைதவறாது செய்துவரவேண்டுவதவசியமென்று ஏற்படுகின்றது. ஆகையாற்றான் ஆர்யகுலத்துதித்த ஒவ்

---

* குறிப்பு:—இதைப்படிக்கும் ஒவ்வொரு ஆஸ்திகனும் ஏதோ இது ஒருகதையென்று எண்ணாது இதுநேரில்பார்த்த பெயரிவர் கூறியவிஷயமாதலால் இதைநம்பி ஒவ்வொருப் பிராம்மணனும் இவ்விதசக்தியை அடைவதற்கு முயற்சிசெய்யவேண்டுமென்றே இக்கதையை இங்கு எழுதினோம் என்று கண்டுகொள்ளவும்.

வொரு ஜாதிப்பிராம்மணனும், க்ஷத்திரிய வைசியர்களும் இவ்வித மஹாசக்தியை யடையவேண்டுவதவசியமெனக் கருதியே பிராம்மணன் 8-வது வயது முதற்கொண்டும், க்ஷத்திரியன் 11-வது வயது முதற்கொண்டும், வைசியன் 12வது வயது முதற்கொண்டும் காயத்திரி மஹாமந்திரோபதேசத்தைப்பெற்று முறைப்படி அதை ஜபித்துவரவேண்டுமென நம் பெரியார் விதித்தனர்.

சங்கை:—மேற்சொல்லிய காயத்திரீ மந்திரமும், ஸந்தியானுஷ்டான காலத்திற் சொல்லப்படும் ஏனைய மந்திரங்களும் வடமொழியிலேயே இருப்பதுடன், அம்மந்திரங்களை யுச்சரிக்குங்கால் உதாத்தம், அனுதாத்தம், ஸ்வரிதம், என்ற சிலஸ்வரங்களும் அத்துடன் சேர்க்கப்பட்டிருப்பதால் மேற்கண்ட ஸ்வரவிசேஷங்களை எளிதிற் கற்கக்கூடாத நஞ்சிறுவர்கள் காயத்திரீ முதலிய வேதமந்திரங்களை அவரவர்க்குப் பழக்கத்திலிருந்து வரும் ஏனைய பாஷைகளில் மொழிபெயர்த்து அம்மொழி பெயர்ப்பைக்கொண்டு ஏன் ஸந்தியானுஷ்டானஞ் செய்யக்கூடாது? எவ்விதமாயினும் எல்லாம்வல்ல தேவதையைத் தியானஞ் செய்யவேண்டுவது தானே முக்கியமானது. தேவதாத்தியானஞ் செய்தலை எவ்வழியாற் செய்தாலென்னை?

உத்தரம்:—இந்த வடமொழியை கீர்வாணபாஷை என்றும், தேவபாஷை என்றும் சொல்வதை உலகில் எதிலும் நடுநிலைமை வஹித்து உண்மை யறிதலையே முக்கிய நோக்கமாகக்கொண்ட உத்தம மேதாவிகள் ஒப்பவேண்டியதும், ஒப்பியதுமாதல்பற்றி தேவதையைத் தியானஞ் செய்தும், அத்தேவதையின் ஸ்வரூபத்தைப் போதிக்கின்ற

மந்திரங்களை ஜபித்தும், அத்தேவதையினிடமிருந்து யாதோ ஒரு பயனை எதிர்பார்த்தும் நிற்கும் நாம் அத்தேவபாஷை யிலுள்ள மந்திரங்களை ஜபித்து அப்பாஷை மூலம் அவர்களை அழைத்தாலன்றோ அத்தேவர்கட்கு அதன்மூலம் நம்மிடத் தில் விசேஷமானப் பிரீதியுண்டாகி நாம் கோறியவைகளை அவர்கள் கொடுக்கக்கூடும். அவ்விதமின்றி அவர்கட்குப் பழக்கமில்லாத வேறு பாஷைகள் மூலம் அவர்களை ஆரா திக்கத் தொடங்குவோமாயின் நம்மால் உச்சரிக்கப்படும் பாஷையானது அவர்களா லுச்சரிக்கப்படும் பாஷைக்கு நேர்மாறாக யிருப்பதுடன் அவர்களிடம் எப்பாஷையை உச்சரிக்கவேண்டுமோ அம்முறைதவறி நடந்தவர்களாகவும் நாமாகிவிடுவோமாதல் பற்றி அதன் மூலம் தேவதாப்பிர சாதத்தை யடையக்கூடாதவர்களாயாவதுடன் சுருங்கச் சொல்லின் அவர்களின் கோபத்திற்குமல்லவா பாத்திரர்களா கவேண்டிவரும். ஆகவே தேவதையின் பிரசாதத்தை யடைய விருப்பமுள்ளவன் தேவபாஷையிலுள்ள மந்திரங் களை யுச்சரித்தே அதை அடையவேண்டுவது அவசியமா கின்றது.

சங்கை — "பொதுவாய்த் தேவதைகள் மனிதர்களை விட மேலான சக்தி, அறிவு இவைகளுள்ளவர்" எனச்சாஸ் திரங்கள் கூறுகின்றன. மனிதருள் எண்ணிறந்த மேதாவி கள் ஒரே சமயத்தில் பலபாஷைகளைக் கற்றிருக்கின்றனர் என்பதைக்கண் கூடாகக்கண்டும், கேட்டுமிருக்கின்றோம். **षट्भाषाचतुरस्स एव भुवने न ज्ञायते केन वा.** (ஷட்பாஷாசது ரஸ்ஸ ஏவ ஹுவநே ந ஜ்ஞாயதே கேந வா!) "ஆறுபாஷை களிற் சதுரரான அவர் உலகில் எவராற்றான் அறியப்பட

வில்லை" என்று "ராஜசூடாமணி தீக்ஷிதர்" என்றகவி தற்புகழ்ச்சி செய்துகொண்டு மிருக்கின்றார். ஆகவே பல துரைகளிலும் தேவர்களைவிடக் கீழ்நிலையிலுள்ள மனிதரே பலபாஷைகளை யறிந்தவர்களாக இருக்கக்கூடுமானால் எத் துரைகளிலும் மனிதரைவிட மிக்கமேலான தேவதைகள் உலகிலுள்ள எப்பாஷைகளையும் அறிந்திருக்க வேண்டுவ தவசிய மாகின்றதன்றோ. ஆகையால் மேற்சொன்ன மந்தி ரங்களை ஒவ்வொருவரும் தத்தமக்குப் பழக்கமான தேச பாஷையில் மொழிபெயர்த்து ஜபித்துவந்த போதிலும் அதைத் தேவர்கள் சுளுவில் அறிந்து கொள்ளக்கூடு மாதல் பற்றி அதன்மூலம் தேவதைகளின் பிரசாதமுண்டாக வேண்டுவதவசிய மாயிருக்க அது உண்டாகாதென்று சொன்னது எங்ஙனம்?

உத்தரம்:—உலகில் நியாயஸ்தலத்தில் தலைமை அதிகா ரம் வஹிக்கும் பெரிய அதிகாரியானவர் (ஜட்ஜ்) தான் ஏனை யதேச பாஷைகளைக் கற்றவராயினும் "நியாயஸ்தலத்தில் ஆங்கிலத்தைத் தவிர்த்துவேறு எந்தப் பாஷையாலும் வாதஞ் செய்தல்கூடாது" என்று உத்தரவிட்டிருந்தால் அவ்வுத்தரவை மீறி'த்தாமும் இந்நியாயாதிகாரியும் ஒரே தமிழ்த்தேசத்திற்றான் ஜனித்திருக்கிறோம்; தமக்குப்பழக்க மானத் தமிழ் பாஷை அவருக்கும் தெரியுமாதலால் தாம் சொல்லும் வாதத்தை தமிழில் ஏன் சொல்லக்கூடாது' எனவெண்ணி ஒருநியாயவாதி (வக்கில்) தமது வாதத்தைத் தமிழில் சொல்லுவாரேல் அவ்வாதத்தை அந்த நியாயாதி காரி காது கொடுத்துக்கேட்பாரா? கேட்கமாட்டார். அது மட்டுமன்றி கோர்ட்டாரை அவமதித்ததாகக்கூட அந்த

நியாயவாதியினிடத்துக் குற்றஞ்சாட்டுவாரன்றோ! ஆகவே ராஜாங்க பாஷையிற் பேசுவதற்குவேண்டிய அதிகாரம் (பட்டம்) பெற்ற நியாயவாதீ வேறு பாஷையிற் பேசுவது தவறாக ஆவதுடன் அது அவர் கோறியபலனைத் தராததாக வும் ஆகின்றது. அப்பாஷையில் பேசுவதற்கறியாத வாதிப் பிரதிவாதிகள் விஷயத்திலோ வெனின் அவர்கள் பேசுவதை ஜட்ஜ் அறிந்திருந்தபோதிலும் ராஜாக்ஞையை யொட்டி அதை ராஜபாஷையில் மொழிபெயர்த்துமாற்றி விடுவதென் பது பெரியநியாயஸ்தலங்களில் நடந்து வருவது போலவே இங்கும் यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै (யொ ப்ரஹ்மாணம் விதயாதி பூர்வம் யொ வெ வெதாம்ஸ்ச ப்ரஹிணொதி தஸ்மை) "எவர் பிரும்மதேவனைப் படைத் து அவருக்கு வேதங்களை உபதேசித்தாரோ" என்று சொன்னபடி ஸர்வலோக ராஜாவான ஸ்ரீமந்நாராயணனு டைய முகத்தினின்றும் தேவபாஷை வடிவமாக வெளிவந்த வேதத்தை உச்சரிக்கக் கடமைப்பட்ட ஒவ்வொரு அதிகாரி யும் அத்தேவபாஷையிலேயே அதை உச்சரிக்க வேண்டு மென்றும், அதை உச்சரிக்கும்பொழுது அதற்குரிய உதா த்தம், அனுதாத்தம், ஸ்வரிதம் முதலியஸ்வரங்களுடனேயே 'குருசொல்லத்தாமும் அவ்விதமே திருப்பிச்சொல்ல' என்ற முறையையொட்டிச் சொல்லவேண்டுவதவசியமென்றும், பகவத்பிரஸாத ஹேதுவான கர்மகாலங்களில் தேவபா ஷைக்குப் புறம்பான ஏனையதேச பாஷைகளில் பேசக்கூடா தென்று न म्लेच्छितवै (ந ம்லெச்சிதவெ) என்பதாலும், தேவபாஷையிலும் அசுத்தமாகப்பேசக்கூடாதென்று नाप-भाषितवै (நாபபாஷிதவெ) என்பதாலும்விலக்கிக் கூறியி ருப்பதிலிருந்தும் தேவதாஸார்வபௌமனான ஸ்ரீமந்நாரா

யனானுடையவோ, अङ्गान्यन्यादेवताः (அங்கான்யன்யாதேவதா:) என்றபடி பகவதங்க பூதர்களான தேவர்களுடையவோ பிரஸாதத்தையடையவிரும்பும் ஒவ்வொருஜீவனும் பகவத் பிரஸாதத்தை உண்டுபண்ணக் கூடியவைதிககர்ம காலங்க ளில் श्रुतिस्मृती ममैवाज्ञा (ச்ருதிஸ்ம்ருதீ மமைவாஜ்ஞா) என்றபடி பகவதாக்ஞாரூபமானவேதமானது எந்தப் பாஷையில் வெ ளிவந்திருக்கின்றதோ அந்தப் பாஷையில்தான் அதை உச் சரிக்க வேண்டுமென்றும், ஏனைய பாஷைகளில் மொழிபெ யர்த்து உச்சரித்தல் என்பது பகவதாக்ஞா ரூபமான சப்த த்தை மீறினதாக ஆகும் என்றும் ஏற்படுவதால் தேவதாப் பிரஸாதத்தை விரும்பும் நாம் தேவபாஷையிலேயே அதைச் சொல்லவேண்டுவ தவசியமாகின்றது.

மேலும் மந்திரஜபம், மந்திரார்த்தானுஸந்தானம் என்று இரண்டு காரியங்கள் ஸந்தியானுஷ்டானத்தில் அடங்கி யிருக்கின்றன. மந்திரத்தின் பொருளை அநுஸந்தித்தல் (தியானித்தல்) என்ற விடத்தில் வேண்டுமானால் நீ சொல் வது ஒருவாறு பொருந்தலாம். மந்திரஜபம் என்பது— எந்தப் பாஷையில் மந்திரம் ஏற்பட்டிருக்கின்றதோ அப்பா ஷையிலேயே வர்ண ஆநு பூர்வியுடன் மந்திரத்தை மனதில் வாங்கி இடை விடாத ஆவிருத்திசெய்தல் ரூபமாயிருக்கிற படியாலும், இங்கு காயத்திரீ மந்திரஜபம் அதன் அர்த்தா னுஸந்தானம் இரண்டினாலேயே மேற்கூறியபயன் வரும் என்று சாஸ்திரங்கள் சொல்லுவதாலும், மஹாமந்திர த்தை வேறு பாஷையில் மொழிபெயர்த்தால் அதுகாயத் திரீ மந்திரமாக ஆகாததுடன், காயத்திரீ ஜபத்தால் ஒரு வன் அடையவேண்டிய பயனை பாஷாந்தரமொழிபெயர்ப்

பால் அடையமுடியாததாகவும் ஆகுமன்றோ! இங்கு லோகானுபவமொன்று கூறுவாம். பள்ளியிற்படிக்கும் மாணவனுக்கு உபாத்தியாயர் ஷேக்ஸ்பியர், மில்டன் முதலியவர்களின் புத்தகங்களைப் பாடங் கற்பிக்கும்பொழுது அப்புத்தகத்திலுள்ள சிலபாடல்களை நாளை ஒப்பிவிக்கவேண்டுமெனக் கட்டளையிட்டார் என வைத்துக்கொள்வோம். அதற்கு அந்த மாணவன் வேறு ஒருவரைக்கொண்டு அப்புத்தகத்தைத்தனக்குச்சுளுவான ஒருபாஷையில் மொழிபெயர்த்து அம்மொழிபெயர்ப்பை மறுநாள் ஒப்பிவிப்பானேயாகில் அதை ஷேக்ஸ்பியர் பாடல் ஒப்பிவித்ததாகவே எண்ணி உபாத்தியாயர் ஸந்தோஷப்படுவாரா? அவனிடம் கோபங் கொள்ளுதல்கூட அவசியமாகிவிடுமன்றோ! அதுபோலவே காயத்திரீ முதலிய மந்திரங்களை ஜபிக்கவேண்டுமென்றால் அது எந்தப்பாஷையில் எந்தவர்ண ஆநுபூர்வி (தொடர்ச்சி) யுடன் இருக்கின்றதோ அப்பாஷையில் அவ்வர்ண ஆனுபூர்வி யுடனேயே அதை ஜபிக்கவேண்டுமேயல்லாது மொழிபெயர்ப்பை யுச்சரித்தால் அது காயத்திரீ மந்திராவிருத்தியாக ஆகாததுடன் காயத்திரீ ஜபத்திற்குரிய பலன் அவனுக்கு வாராதென்பதும் திண்ணமல்லவா! ஆகவே காயத்திரீ முதலிய மஹாமந்திரங்களை வடமொழியில்தான் ஜபிக்கவேண்டுமென்று ஏற்படுகின்றது.

சங்கை:—காயத்திரீ முதலிய மந்திரங்களைத்விஜர்கள் தான் ஜபிக்கவேண்டுமென்றும், மற்றவர் ஜபிக்கக்கூடாதென்றும், மற்றவர் அதை ஜபித்தால் அவருக்கு அம்மந்திர ஜபம் பயன்தராவென்றும் சொன்னது எங்ஙனம்?

உத்தரம்: — இவ்விஷயத்தில் லோகானுபவமொன்று உண்டு. அதாவது:—ஒரு ஊரில் த்விஜரல்லாத ஜமீன்தாரொ

ருவரிருந்தார். அவரிடத்தில் வெகுகாலமாக வேலைபார்த்து வந்த ஒரு த்விஜருடைய ஸ்தானம் காலியாகவே அந்தஸ்தானத்தில் குடும்பியும், ஏழையுமான ஓர்த்விஜர் வேலை பார்த்துவரப் புதிதாக அமர்ந்தார். புதிதாக வேலைபார்த்துவரும் அந்த த்விஜர் "ஒவ்வொரு தினமும் காலையில் 7 மணிக்கு வரவேண்டுமென்று" விதி ஏற்பட்டிருந்தும் சுமார் 8 மணிக்கு மேலேயே வந்துகொண்டிருந்தார். அதுகண்ட ஜமீன்தார் அந்த த்விஜனை நோக்கி 'ஓ த்விஜரே! முன்னர் உமது ஸ்தானத்தில் வேலைபார்த்துவந்தவர் யாவரும் 7 மணிக்கே தவறாதுவந்து வேலைபார்த்திருக்க நீங்கள் மட்டும் ஒவ்வொருதினமும் 8 மணிக்கு வருகின்றீர்களே! அதன் காரணம் யாது?' என்று கேட்டார். அதுகேட்ட அந்த த்விஜர் 'ஓ பிரபுவே! நான் ஒவ்வொருநாளும் வழுவாது காயத்திரீ ஜபம் செய்துவருகின்றேன்; ஆகையாற்றான் நாழிகையாகி விடுகின்றது' என்றார். அதுகேட்ட ஜமீந்தார் த்விஜரை நோக்கி 'காயத்திரீ என்பது என்னை? அதைச் சொல்லுங்கள்; கேட்ப்போம்.' எனவே அதற்கு அந்த த்விஜர் காயத்திரீ என்பது ஒரு மஹாமந்திரமென்றும், அதை த்விஜர் தவிர மற்றவர் சொல்லவோ கேட்க்கவோ கூடாதென்றும், அவ்விதம் சொல்வதால் மற்றவற்கு அதுபயன் தராவென்றும் சொன்னார். இதைக்கேட்டவுடன் ஜமீந்தார் சினங்கொண்டு ஆண்டன் யாவற்கும் பொது வாகையால் அவர் சொன்ன (வெளியிட்ட) காயத்திரி நம்வாயினாற் சொன்னாற்றான் பயன்தருமென்றும், என்வாயினாலுச்சரித்தால் பயன் தராவென்றுஞ்சொன்னது எங்ஙனம்? இதைநீவிர் பிரத்யக்ஷமாக நிரூபணஞ்செய்யாவிட்டால் உம்மை வேலையினின்றும் கட்டாயம் நீக்கிவிடுவேன் என்றார். அதுகேட்ட

அந்தத்விஜர் இன்று முதல் சில தினங்களுள் அதை அனுபவத்தில் காட்டிவிடுகின்றேன்; ஆனால் தாங்கள் குறித்த தினத்தில் தங்கள் ராஜ்யத்திலுள்ள ஜனங்கள் யாவரையும் வரவழைத்து எனக்குத் தெரிவித்தால் அன்று நான் யாவருமறிய அதை நிரூபணஞ் செய்வதில் யாதுந்தடையில்லை என்றார். அதுகேட்ட ஜமீன்தாரரும் அவ்விதமே யாவரையும் வரவழைக்கவே யாவரும் வந்து கூடினர். அப்பொழுது அந்தத்விஜர் சபையில் ஜமீந்தாரரின் அருகில் எழுந்து நின்றுகொண்டு சபையிலுள்ளோர் யாவரும் கேட்கும்படி சமீபத்தில் நின்றுகொண்டிருந்த சேவகனை நோக்கி ஜமீன்தாரை விரலால் குறிப்பிட்டு "அடா! நீ இம்மனிதனைக் கழுத்திற் கையைக்கொடுத்து வெளியிற் கொண்டுதள்ளு" என்று ஒருதடவை சொன்னார். அதைக்கேட்ட ஸபையிலுள்ளோர் யாவரும் திடுக்கிட்டு 'அந்தோ! இஃதென்னை. இந்தத்விஜர் தனதுயஜமானனை இவ்விதஞ்சொல்லுகின்றாரே. இவர் இவ்விதஞ் சொல்வது மிகவும் அன்னியாயமாயிற்றே' என வெண்ணினவர்களாய் என்ன நடக்கின்றது பார்ப்போம் என்று சும்மாயிருந்தனர். ஒருதரஞ் சொன்னதில் பயன் ஏற்படாததைக் கண்டு அந்த த்விஜர் சேவகனைப்பார்த்து முன் சொன்னதையே திரும்பவும் திரும்பவும் சொன்னார். இவர் என்ன சொல்லியும் இவர் வார்த்தையானது பயன்படாதிருந்ததுடன் அச்சபையிலுள்ளோர் யாவரும் இந்த த்விஜன் செய்வது ரொம்பவும் அன்னியாயமென்றும் சொல்லி அவரைத் தூற்றவும் தலைப்பட்டுவிட்டனர். அவ்விதம் பலதடவை சொல்லக் கேட்ட அந்த அந்த ஜமீன்தாரருஞ் சினங்கொண்டு தனதருகில் நிற்கின்ற சேவகனை நோக்கி "அடா! இம்மனிதனைப் கழுத்திற் கையைக்

கொடுத்து வெளியிற் கொண்டு தள்ளு" என்று சொல்லவே அதுகேட்ட சேவகன் உடனே இந்த த்விஜரின் கழுத்திற் கையைக்கொடுத்து வெளியிற்றள்ள யத்தினஞ்செய்தான். அப்பொழுது அந்த த்விஜர் சபையிலுள்ளோரையும் ஜமீந்தாரரையும் நோக்கி "ஓ ஜமீந்தாரர் அவர்களே! ஸபையிலுள்ளோர்களே! கேளுங்கள் 'இம்மனிதனைக் கழுத்திற் கையைக் கொடுத்து வெளியிற்கொண்டு தள்ளு' என்ற ஓரேவார்த்தை எனது வாயிலிருந்து வந்தபொழுது அவ்விதம் ஒன்றும் சேவகன் செய்யாதிருந்ததுடன் இச்சபையில் வீற்றிருக்கும் யாவருங் கோபத்தையும் அடைந்தீர்கள். பிறகு அதே வார்த்தை ஜமீந்தார் அவர்கள் வாயினின்றும் வந்ததும் சேவகன் அம்மொழிப்படியே எனது கழுத்திற் கையைக் கொடுத்து வெளியிற்கொண்டுதள்ள வாரம்பித்து விட்டதுடன், சபையிலுள்ள நீங்கள்யாவரும் சந்தோஷத்தையு மடைந்தீர்கள். மேலும் இது நியாயந்தான் என்றும் எண்ணுகின்றீர்கள். இவ்விடத்தில் ஒருவிஷயத்தை யோஜித்துப் பாருங்கள். "இம்மனிதனைக் கழுத்திற் கையைக் கொடுத்து வெளியிற்கொண்டு தள்ளு" என்ற ஓரே வார்த்தை எனது வாயினின்றும் பல தடவை வந்தபொழுதும் பயன் தரவில்லை. அதேவார்த்தை அதிகாரப் பதவியிலுள்ள இந்த ஜமீன்தார் வாயினின்றும் வந்ததும் பயன் தரத்தக்கதாக ஆயிற்று. இவ்விதமே காயத்ரீ என்ற மஹா மந்திரமானது அதை உச்சரிக்கத்தக்க அதிகாரம்பெற்ற எனது வாயினின்றும் வந்தால் பயன்தருமா, அதை உச்சரிக்கத்தக்க அதிகாரம் பெறாதவரின் வாயினின்றும் வந்தால் பயன் தருமாவென்பதை நீங்களே யோஜித்துப் பார்த்து இச்சபையில் யாவருமறியுமாறு பதிலுரைக்கவேண்டும்" எனக் கேட்டுக்

கொண்டார். அது கேட்ட ஜமீந்தார் அவர்களும், சபையி லுள்ளோரும் திகைப்படைந்து இந்த த்விஜர் சொல்வது நியாயந்தான் என்று சொல்லி, வார்த்தை ஒன்றாக விருந்தாலும் ஒருவன் வாயிலிருந்து வந்தால் அது பயன் தருவதில் லையென்றும், அதற்கதிகாரியான மனிதன் வாயினின்றும் வந்தாற்றான் உள்ளபடி பயன் தரும் என்றும் நாம் இங்கு கண்கூடாகக் கண்டுவிட்டபடியால், காயத்ரீ முதலிய வைதிகமந்திரங்களை உச்சரிக்கத்தக்க வதிகாரம் பெற்ற த்விஜர்கள் உச்சரித்தாற்றான் அது பயன் தருமென்றும், மற்றவர் உச்சரித்தாற் பயன்தராவென்றும் தீர்மானஞ் செய்தனர். ஜமீந்தார் அவர்களும் அந்த த்விஜரைப் புகழ்ந்து அன்று தொடங்கி அவரை "காயத்ரியை முறைதவறாது அனுஷ்டித்து வாருங்கள். உங்களுக்கு வேண்டிய பொருளை நீங்களிருக்குமிடத்திற்கே அனுப்பிவிடுகிறேன்" என்று சொல்லி அந்த த்விஜரை அனுப்பிவிட்டார் என்பதேயாம். இந்த விருத்தாந்தத்திலிருந்து காயத்ரீ முதலிய மகா மந்திரங்களை உபநயனம் முதலிய ஸம்ஸ்காரங்களைப் பெற்ற ஜாதி த்விஜர்களே ஜபித்துவர வேண்டுமென்று தெளிவாகின்றது. ஆகவே காயத்ரீ முதலிய வைதிக மந்திரங்களை த்விஜர் தவிர மற்றவர் ஏன் ஜபிக்கக்கூடாதென்பதற்கு இதனால் சமாதானஞ் சொல்லப்பட்டது.

சங்கை:—காயத்ரீ முதலிய மந்திரங்களை த்விஜர் தவிர மற்றவர் ஜபிக்கக்கூடாதென்றால் மேற்குத் தேசத்திலுள்ளவர்களில் எண்ணிறந்தவர்கள் தற்காலம் ருக்வேதம் முதலிய வேதங்களையும், அதன் பாஷ்யங்களையும் நன்கு கற்று அதை அவர்கட்குரிய தேச பாஷைகளில் மொழிபெயர்த்தும் வைத்துக்கொண்டிருக்கின்றனர். மேலும் நீங்களும் வேதங்களைத்

தமிழில் மொழிபெயர்த்தும் வெளியிடுகின்றீர்கள். த்விஜ ரல்லாதார் வேதமந்திரங்களைச் சொல்லக் கூடாதென்றுஞ் சொல்லிவிட்டு அதைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டால் த்விஜரல்லாதாரும் அவ்வைதிக மந்திரங்களை உச்சரிக்கக் கூடுமன்றோ! அவ்விதம் செய்வது தகுமா?

உத்தரம்:—இம்மந்திரங்களின் ஸமுதாயத்திற்கு "வேதம்" என்றும், "அநுஶ்ரவம்" என்றும் பெயரிடப்பட்டிருக்கிறது. அவற்றுள் வேதம் என்றதற்கு **विदन्ति अनेन धर्मादीन् चतुरः पुरुषार्थान् इति वेदः** (விதந்தி அநேந தர்மாதீந் சதுர: புருஷார்தாந் இதி வேத:) "இதனால் அறம் முதலிய நான்கு புருஷார்த்தங்களையும் அறிகின்றனர்" என்பதால் புருஷார்த்தங்களை அறிதற்கு ஸாதனமாயிருப்பது என்றும், அனுஶ்ரவம் என்றதற்கு **गुरूच्चारणमनुसृत्य शिष्येण श्रूयत इत्यनुश्रवः** (குரூச்சாரணமநுஸ்ருத்ய ஶிஷ்யேண ஶ்ரூயத இத்யநுஶ்ரவ:) "குருவின் உச்சாரணத்தை பொட்டிச் சீடனும் உச்சரித்துப் பெறப்படுவது" என்றதால் குருச்சாரணத்தால் பெறப்படுவது என்றும் பொருள் ஏற்படுகின்றது. ஆகவே,

**मन्त्रो हीनः स्वरतो वर्णतो वा मिथ्याप्रयुक्तो न तमर्थमाह॥**

மந்த்ரோ ஹீந: ஸ்வரதோ வர்ணதோ வா மித்யாப்ரயுக்தோ ந தமர்தமாஹ॥

என்றபடி வேதத்தை ஸ்வரத்துடனேயே சொல்ல வேண்டும்; ஸ்வரம் தவறினால் அதுவேதமாக ஆகாததுடன் அதை யுச்சரிப்பதனால் பயன் எதுவும் இவனுக்கு உண்டாகாதென்றும் சொன்னதிலிருந்து உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம் முதலிய ஸ்வரங்களுடனும், வர்ணானுபூர்வியுட

னும் குருவினிடமிருந்து முறைப்படி கற்கப்படுவதே வேத மாகுமென்றும், அவ்விதம் கற்பதில் த்விஜரல்லாதார்க்கு அதிகாரமில்லையென்றும், அந்தந்த தேசத்தில் அவரவர்க் குரிய பழக்கத்திலுள்ள சில ஸங்கேதமான எழுத்துக்களில் அதை எழுதியோ அச்சிட்டோ வைத்துக்கொண்டு அதன் பொருளை அறிந்துகொள்வதில் தோஷம் யாதுமில்லை யென் றும், இம்முறைப்படி அதன்பொருளை யறியலாமே யல்லாது அதன்மூலம் அவர்கள் வேதம்வந்த வைதிகர்களாகமாட் டார்களென்றும், இவர்களைக்கொண்டு ஸ்வாமி ஸன்னிதியில் வேதபாராயணஞ் செய்விக்கவோ மற்றும் வேதபாராயண ரூபமான ஸத்கர்மத்தால் பகவதாராதனம் முதலிய ஸத்கர் மங்களைச் செய்வதோ, தகாதென்றும் கொள்ளவும். ஆகை யாற்றான் நாமும் வேதத்தின் பொருளை மட்டுமாவது மற்ற வரும் அறியட்டும் எனக்கருதியே வேதத்தைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட முன்வந்தோம். ஆகவே வே தத்தைக் கற்க வதிகாரம் பெற்ற த்விஜர் குரு முகமாய் ஸ்வர வர்ண ஆனுபூர்வியுடன் முறைப்படி அதைக்கற்று, அதன் பொருளை வடமொழியிலுள்ள பாஷ்ய க்ரந்தங்கள் வாயிலாகத் தெரிந்துகொள்ளப் போதிய சவுகரியமில்லாத வர்கள் இதன்மூலம் தெரிந்து கொள்ளக்கூடும் என்றும், அதைக்கற்க வதிகாரம்பெறாத த்விஜரல்லாதாரும்இம்மொழி பெயர்ப்பின் மூலம் அதன் பொருளைமட்டுமாவது தெரிந்து கொள்ளட்டும் என்றும், இவ்வேலையில் நாம் இறங்கினோம். ஆகவே நாம் செய்வதிலோ மற்றவர் செய்ததிலோ குண மிருக்கின்றதே யொழிய தவறு எதுவுமில்லை யென்றே கண்டுகொள்க.

இவ்விஷயத்தில் லோகானுபவம் ஒன்று கூறுவாம். ஸங்கீதத்தில் பிரியமுள்ள வொருவன் தியாகராஜசுவாமிகள் தீர்த்தநாராயண சுவாமிகள், ஜயதேவர் முதலியவர்களால் அந்தந்தப்பாஷையில் ஏற்படுத்தப்பெற்ற கீர்த்தனங்களைப் பிறர் பாடக்கேட்டுத் தானும் பாட வெண்ணங்கொண்டவனாய் புஸ்தகத்தில் அச்சிட்டோ எழுதிவைத்தோ இருக்கும் கீர்த்தனங்களைப் படித்தும் அக்கீர்த்தனங்கள் எந்தராகத்திற் பாடப்படுகின்றனவோ அந்த ராகங்களின் லக்ஷணங்களையும் அதைப்பற்றிய வேறுகிரந்தங்கள்மூலம் தெரிந்து கொண்டானேயானுல் அவ்விதம் தெரிந்து கொண்டவனும் சங்கீதவித்வாந்தான் எனக்கருதி அவனைக் கச்சேரியில் பாடும்படி ஏராளமாகப் பணங்கொடுத்து ஏற்பாடு செய்யலாகுமா? அவன் பாடினுலும் அதையும் பாட்டுத்தான் எனவெண்ணி சங்கீதப்ரியர் (அதன் லக்ஷணமறிந்தவர்) சந்தோஷிப்பாரா! இக்கீர்த்தன விஷயத்தில் இவனுங் கொஞ்சம் பாடுபட்டிருக்கிறுன்; சங்கீதமென்பது இன்னதென்றும் அறியாதவனைவிட இவன் எவ்வளவோ மேலானவன் என்று மட்டுந்தானே அவன் எண்ணப்படுவான். அதுபோலவே ஸ்வரம் முதலியதுடன் குருவினிடமிருந்து முறைப்படிக் கிரஹிக்கப்படுவதே வேதமென்றும், அதைப்பாராயணஞ் செய்வதாலேயே வேத வேத்யனுன ஸ்ரீமந் நாராயணன் ப்ரீதியடைந்து அருள் புறிவாரென்றும் ஏற்படுகின்றது. அஃதுடன் மற்றவரும் அதன் பொருள் முதலியவற்றை இம்மாதிரி மொழி பெயர்ப்புகள் மூலம் அறிந்து பகவன் மகிமையி லீடுபட்டு பகவதாராதனத்திற்குரியபடி தத்தமக்கேற்பட்டவழியில் எம்பெருமானை ஆராதித்து அவனதருளைப் பெற்றுருமுகலாம் என்பதில் யாதும் ஸந்தேஹமில்லை.

ஆகவே காயத்திரீ முதலியமஹாமந்திரங்களை ஏனையபாஷைகளில் மொழிபெயர்த்து உச்சரித்தல் தகாவென்றும், வடமொழியிற்றான் உச்சரிக்கவேண்டுமென்றும் பெறப்பட்டது.

பொதுவாய் வேதத்திற் சொல்லிய கர்மங்கள், நித்யம் நைமித்திகம், காம்யம் எனமூன்றுவிதமான பிரிவையுடையனவா யிருக்கின்றன. அவற்றுள் यावज्जीवमग्निहोत्रं जुहोति (யாவஜ்ஜீவமக்நிஹோத்ரம் ஜுஹோதி) "உயிருள்ளவரை அக்நிஹோத்திரஞ் செய்யவேண்டும்" என்றதால் விதிக்கப்பட்டகர்மம் "நித்யம்" எனப்படும். सोमोपरागे स्नायात् (ஸோமோபராகே ஸ்நாயாத்) "சந்திரக்கிரஹண முண்டானதும் ஸ்நானஞ் செய்யவேண்டும்" என்றதால் விதிக்கப்பட்டது "நைமித்திகம்" எனப்படும். वृष्टिकामः करीर्या यजेत (வ்ருஷ்டிகாம: கரீர்யா யஜேத) "மழையில் விருப்பமுள்ளவன் "காரீரீ" என்ற இஷ்டியைச் செய்யவேண்டும்" என்றதால் விதிக்கப்பட்டது "காம்யம்" எனப்படும். ஆகவே अहरह स्संध्यामुपासीत (அஹரஹ ஸ்ஸந்த்யாமுபாஸீத) "ஒவ்வொருதினமும் ஸந்தியோபாஸனஞ் செய்யவேண்டும்" என்றதால் விதிக்கப்பட்டஸந்தியோபாஸனம் ஸாயங்காலம், பிராதக்காலம் என்ற நிமித்தமானது அவச்யம் வரக்கூடியதாதல்பற்றி முற்கூறியமூன்று வித கர்மங்களுள் நித்யகர்மத்திற்கு கூறிய नियत निमित्तकं कर्म नित्यम् (நியதநிமித்தகம் கர்ம நித்யம்) "அவச்யம் வரக்கூடிய நிமித்தத்தையொட்டிசெய்யப்படும் கர்மம் நித்யம்" என்ற லக்ஷணமிருப்பதாலும் अहरहः (அஹரஹ:) ஒவ்வொருதினமும் என்று திருப்பிச்சொல்லியதிலிருந்தும் நித்யம் என்றே ஏற்படுகின்றது. நித்யகர்மாவான இத்தகைய ஸந்தியானுஷ்டானத்தை ஒவ்வொருத்விஜனும் உபநயனந்தொடங்கி ஒவ்

வொருநாளும் மூன்று ஸந்தியாகாலங்களிலும் அனுஷ்டித்தே தீரவேண்டும் என்று சாஸ்திரங்கள் வற்புருத்துகின்றன.

சங்கை:—प्रयोजनमनुद्दिश्य न मन्दोऽपि प्रवर्तते (ப்ரயோஜநமநுத்திஶ்ய ந மந்தோऽபி ப்ரவர்த்ததே) "பயனை எதிர்பாராது மந்தனும் பிரவிருத்திசெய்வதில்லை" என்பது பொதுவாய் யாவருமறிந்தவிஷயம். இவ்விதமிருக்க கர்மகாண்டரஹஸ்யங்களையுபதேசிக்கவந்தகர்ம மீமாம்ஸகர்கள்

**येषां च कर्मणां करणे फलाभावः, अकरणे च प्रत्यवायबाहुल्यं, तान्येव च कर्माणि नित्यानि ।**

யேஷாம் ச கர்மணாம் கரணே ஃபலாபாவ:, அகரணே ச ப்ரத்யவாயபாஹுல்யம், தாந்யேவ ச கர்மாணி நித்யாநி ।

"எந்தக்கர்மங்களைச் செய்தால் பயன்கிடையாவோ, எவைகளைச் செய்யாவிடில் பிரத்யவாயம் என்றபாபம்வருமோ அவைகளே "நித்யம்" எனப்படும்" என்றல்லவோ கூறுகின்றனர். இவர்கள் சொல்வதை உற்றுநோக்குங்கால் ஸந்தியானுஷ்டானமும் நித்தியகர்மமாயாகின்றது பற்றி இதைஅனுஷ்டித்தால் பயன் யாதுமில்லை என்று ஏற்படுகின்றதே? அவ்விதமாயின் பயன் தராக்கர்மத்தை நாம் செய்யவேண்டுவ தவசியமில்லை யன்றோ?

உத்தரம்—ஸந்தியானுஷ்டானத்தால் பயன் எதுவுமில்லாவிடினும் செய்யாவிட்டால் தோஷம்வருமாதலால் அத்தோஷம் வராமலிருப்பதற்காக அதை நாம்செய்யவேண்டுவதவசியமாகின்றது.

சங்கை:—சந்தியானுஷ்டானத்தால் பயன் உண்டா இல்லையா? என்றால், செய்யாவிடில் தோஷம் வருமல்லவா?

அது வராமலிருக்கவேண்டியே அதைச் செய்யவேண்டும் என்று சொல்வது பொருந்துமா? ஒருவன் ஒரு கர்மத்தைச் செய்யாமலிருப்பதற்காகவே ப்ரத்யவாயம் என்ற பாபம் வருமாயின் வைதிகர்களென்றும், சாஸ்திரவஶ்யர்களென்றும் சொல்லிக் கொள்ளுகின்றவர்களாலும் எவ்வளவோ சாஸ்திரவிஹிதகர்மங்கள் செய்யப்படாமலிருக்கின்றனவாதல்பற்றி சாஸ்திர விஹிதமான ஸந்தியோபாஸனம் அக்நிஹோத்திரம் முதலிய இரண்டொரு கர்மங்களைச் செய்தபோதிலும் சாஸ்திர விஹித ஏனைய கர்மங்களைச் செய்யாமை மூலம் அவர்கட்குப் பாபமே அதிகமாகி பாபபலனான நரகாதிகளையே அனுபவிக்கவேண்டியவர்களாக ஏற்படுவார்களேயொழிய ஸந்தியோபாஸனம் முதலிய இரண்டொரு கர்மங்களால் மட்டும் புண்யவான்களாக ஆவதற்கிடமில்லை. மேலும் எவன் எந்த வேலையைச் செய்யவில்லையோ அதனால் அவ்வேலையின் மூலம் கிடைக்கக்கூடிய பயன் கிடையாவென்று மட்டும் சொல்வது பொருந்துமேயல்லாது அதைச் செய்யாமையாலேயே பாபம் வரும் என்று சொன்னது பொருந்துமா?

உத்தரம்:—अकुर्वन् विहितं कर्म निन्दितं च समाचरन् ।
प्रसजंश्चेन्द्रियार्थेषु नरः पतनमृच्छति ॥

𑌅𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌵𑌿𑌹𑌿𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌨𑌿𑌨𑍍𑌦𑌿𑌤𑌂 𑌚 𑌸𑌮𑌾𑌚𑌰𑌨𑍍 ।
𑌪𑍍𑌰𑌸𑌜𑌂𑌶𑍍𑌚𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌷𑍁 𑌨𑌰𑌃 𑌪𑌤𑌨𑌮𑍃𑌚𑍍𑌛𑌤𑌿 ॥

"சாஸ்திரவிஹிதகர்மாவைச் செய்யாதவன் பதனத்தை (பாபத்தை) அடைவான்" என்று மனு கூறுவதால் சாஸ்திரங்கள் எந்தக் கர்மத்தைச் செய்தே தீரவேண்டுமென்று விதித்தனவோ அதைச் செய்யாதிருத்தல் மூலம் பாபம் வரும் என்று சொல்வதில் யாது தடை.

சங்கை:—மேற்சொன்ன மனு வசனத்தை உற்றுநோக்குங்கால் நீங்கள் சொல்லும் பொருள் ஏற்படாது வேறுவிதமாகவல்லவோ பொருள் ஏற்படுகின்றது. அதாவது:—**विहितमकुर्वन्** (விஹிதம்அகுர்வந்) விஹித கர்மத்தைச் செய்யாதவனுய் என்ற விடத்திலுள்ள **अकुर्वन्** (அகுர்வந்) என்ற சப்தமானது **कृ** (க்ரு) என்ற தாது வின்பேரில் **शतृ** (சத்ரு) என்ற பிரத்யயம் வைத்து ஏற்பட்டது. அந்த **कृ** (க்ரு) என்ற தாது வின்மேலிருக்கும் **शतृ** (சத்ரு) பிரத்யயத்திற்கு வியாகரண சாஸ்திரத்தில் **लक्षणम्, हेतु** (லக்ஷணம், ஹேது) என்ற இரண்டு பொருள்களே கூறப்பட்டிருக்கின்றன. அவற்றுள் **लक्षणम्** (லக்ஷணம்) என்ற அர்த்தத்தைக்கொண்டு யோஜிப்போமாயின் "விஹிதகர்மாவைச் செய்யாதிருத்தலானது பதனம் (பாபம்) வரும் என்பதற்கு க்ஞாபகம்" என்று மட்டும் பொருள் ஏற்படுகின்றதேயொழிய விஹித கர்மத்தைச்செய்யாதிருத்தல் என்ற **अभाव** (அபாவ) அபாவத்திலிருந்து பிரத்யவாயம் (பாபம்) என்ற **भाव**(பாவ) வஸ்துவானது உண்டாகின்றதென்று பொருள் ஏற்படவில்லை.

அப்படியாயின் இந்தச் சுலோகத்தின் கருத்துத்தான் என்னே எனின்? அதனுண்மையை இங்கு கூறுவாம்.

**न हि कश्चित् क्षणमपि जातु तिष्ठत्यकर्मकृत् ।**

ந ஹி கஸ்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத் ।

"எவனும் க்ஷணமேனும் கர்மம் செய்யாது ஒருபோதுமிரான்" என்ற கீதாவசனப்படி விஹிதகர்மத்தைச் செய்யவேண்டிய காலத்தில்சாஸ்திர விஹிதமல்லாத (அசாஸ்திரீயமான கர்மத்தைச் செய்வதன் மூலம் அவ்வசாஸ்திரீய கர்மத்தின் பயனுன பாபமானது வந்துவிடும் என்பதை இந்த

अकुर्वन् (அகுர்வந்) என்ற விடத்திலுள்ள शतृप्रत्यय (ஶத்ரு ப்ரத்யய) மானது ஞ்ஞாபகப்படுத்துகின்றது என்று ஏற்ப் படுகின்றது.

இரண்டாவதான हेतु (ஹேது) என்ற பொருளை शतृ-प्रत्यय (ஶத்ரு ப்ரத்யய) த்திற்குக்கொள்வோமாயினும் கர்மமீமாம்ஸகர்கள் சொல்லுகிறபடி சொல்வதற்கிடமில்லை. ஏனெனில்:—ஒவ்வொரு மனிதனுக்கும் இயற்கையில் பல ஜன்மங்களிற் செய்த பாபகர்மங்களிருக்கக்கூடுமாதல்பற்றி அதன் பயனான துக்கத்தை வரவிடாது தடைசெய்துகொண்டிருந்த விஹிதகர்மகரணத்தை (அனுஷ்டானத்தை) நெருத்தியதிலிருந்து பல ஜன்மங்களிற் செய்த பாபகர்மபலனான துக்கம் வந்து சேர்ந்துவிடுவதற்கு விஹிதகர்மத்தைச் செய்யாதிலிருத்தல் காரணமாகின்றமையால் வேறு ஜன்மங்களிற் செய்த பாபகர்மபலனான துக்கத்தைத் தடுப்பதற்குவேண்டியே விஹிதகர்மத்தைச் செய்யவேண்டுமென்று பொருள் கொள்வதவசியமாகின்றது. இவ்விதம் பொருள் கொள்ளாவிடில் नह्यसतः सञ्जायेत, नासतो विद्यते भावः (நஹ்யஸத꞉ ஸஞ்ஜாயெத, நாஸதொ வித்யதெ பாவ꞉) "அபாவத்தினின்றும் பாவமுண்டாகாதன்றோ!" என்ற சுருதி ஸ்மிருதி வசனங்கள் வீணாவதுடன் அபாவம் என்பது எல்லாவிடத்திலும் சுலபமாதலால் शृङ्गेऽपि स्तनकार्यं कुर्यात् (ஶ்ருங்கெ ஽பி ஸ்தநகாய்ய஍ம் குர்யாத்) கொம்பினின்றும் பாலைக் கறக்கலாமாதல்பற்றி பால்கறக்கும் பசுமுதலியன தேவையில்லை என்றும் ஏற்பட்டுவிடும். ஆகவே நித்திய கர்மத்தைச் செய்யாதிருத்தல் என்ற अभाव (அபாவ) அபாவத்தினின்று பிரத்யவாயம் என்ற (भाव) (பாவ) பாவரூபமான பாபம் வரும்

என்று சொன்னது பொருந்தாதாகையால் நாம் சொன்னபடியே பொருள் கூறவேண்டிய தவசியமாகின்றது. ஆகவே ஸந்தியானுஷ்டானத்திற்கும் பயன் உண்டென்றும் பயனைத்தாத்தக்க அக்கர்மத்தைச் செய்யவேண்டிய தவசியந்தானென்றும் கொள்வதில் ஆக்ஷேபமில்லையென்றும் ஏற்பட்டுவிட்டது.

சங்கை:—நித்யகர்மத்திற்கும் பயன் உண்டென்றால், நித்யம் என்றும், காம்யம்என்றும், நைமித்திகம் என்றும் கர்மத்தை மூன்றுவிதமாக சாஸ்திரம் கூறினதுமுற்றிலும் வீணாகிவிடுவதாலும், நித்யம் காம்யமாகவும், காம்யம் நித்யமாகவும் ஆகிவிடுவதாலும், நித்யகர்மத்திற்குப் பயன்கிடையாவென்று சொன்ன கர்மமீமாம்ஸகர்களின் சித்தாந்திற்கு விரோதமேற்படுவதாலும் இவ்விதஞ் சொல்வது அவசியமாகின்றதன்றோ ?

உத்தரம்:—கர்மமீமாம்ஸகர்கள் சரீரத்துடன் கூடிய இந்திரன் முதலியதேவர்கள் தனிமையில் இல்லையென்றும், அசேதனமான (ஜடமான) அபூர்வமே பலனைத்தருகின்றதென்றும் **न कदा चिदनीदशं जगत्** (ந கதா சிதநீத்ரு ஶம் ஜகத்) உலகமானது இப்பொழுதிருக்கும் நிலைக்குமாறாக ஒருபொழுதுமில்லை. அதாவது:—அதற்கு அழிவுமில்லை சிருஷ்டியுமில்லை, ஆதல்பற்றி சிருஷ்டிகர்த்தாவுமில்லை என்ற பலவிஷயங்களை உபநிஷத்விருத்தமாகச் சொல்லுகின்றனர். அவ்விதமவர்கள் சொல்வதைவேறு எந்த ஆஸ்திகதர்சனக்காரருமங்கீகரிக்கவுமில்லை. அஃதுடன் நித்யகர்மத்திற்குப் பயனில்லையென்று அவர்கள் சொல்வதற்குமாறாக **आम्रे फलार्थे निमिते छायागन्धावनूत्पद्येते एवं धर्मं चर्यमाणं अर्था अप्यनूत्पद्य-**

ந்தே (க்ருதே ஸஹஸ்ரமேவ நிமித்தே ஆம்ராதமம்யாவகுநமத்யேதே, ஸ்ஸவம் யத்ரும் அமடிராணம் ஸதூர் ஸவரூநமத்யேதே வீதி ஞே |) மாமரத்தைப் பழத்திற்காகப் பயிரிட்டால் நிழலும் வாஸனையுமுண்டாவது போல தர்மத்தைச்செய்தால் அதன் பயனும் இவன் எதிர்பாராவிடினும் வந்தேதீரும் என்றும் ஆபஸ்தம்பர் செல்லி இருக்கிறார்.

இவ்விதமே சங்கர பகவத் பூஜ்யபாதா சார்ய ஸ்வாமிகளவர்களும் நித்திய கர்மத்திற்குப் பயன் உண்டென்றே தமது பாஷ்யக் கிரந்தங்களில் ஸ்தாபித்து மிருக்கின்றனர். ஆதலால் நித்திய கர்மத்திற்கும் பயன் உண்டென்று கொள்வதுதான் உத்தமம் என்று ஏற்பட்டுவிட்டது.

சங்கை:—அவ்விதமாயின் நித்தியமென்றும், காம்யமென்றும் கர்மங்களை இரண்டுவிதமாகப் பிரித்ததின் எண்ணம் என்னை?

உத்தரம்:—அதனுண்மையை இங்கு கூறுவாம்.

न हि कर्मणां काम्यत्वनित्यत्वकृतभेदोऽस्ति। फलेच्छया कृतं कर्म काम्यम्। फलेच्छाविरहितं कर्म नित्यम्॥

ந ஹி கர்மணாம் காம்யத்வநித்யத்வக்ருதபேதோஸ்தி | ஃபலேச்சயா க்ருதம் கர்ம காம்யம் | ஃபலேச்சாவிரஹிதம் கர்ம நித்யம் ||

என்ற சங்கரபாஷ்ய வசனப்படி பலத்தில் விருப்பத்துடன் செய்தால் காம்யமென்றும், பலத்தில் விருப்பமின்றிச் செய்தால் நித்தியமென்றும் ஒரே கர்மம் கூறப்படும். ஆதலால் பலத்தில் விருப்பமும், அஃதின்மையுமே கர்மங்களின் காம்யத்துவத்திற்கும், நித்யத்வத்திற்கும் காரணமாகின்றது என்று கொள்ளவும். ஆகவே பயனற்ற கர்மத்தையே சாஸ்

திரம் விதிக்கவில்லை என்றும், எந்தக் கர்மத்திற்கும் அதததற்குரிய பயன் உண்டென்றும், பயனில்லாக் கர்மம் ஒன்றுண்டெனச் சொல்லும் கர்மமீமாம்ஸகமதம் அவைதிகமென்றும் ஏற்படுகின்றது.

அஃதுண்மையாயின் ஸந்தியாவந்தனம் நித்தியமாயிற்றே; அதற்கும் பயனுண்டோவெனின்? பயனுண்டென்றே அடியிற்காட்டிய வியாஸர், மனு முதலியோரின் வசனங்களுபதேசிக்கின்றன. அவ்வசனங்களாவன.—

व्यास:—दशकृत्व:प्रजप्ता सा त्र्यहाद्यत्कृतं लघु ।
तत्पापं प्रणुदत्याशु नात्र कार्या विचारणा ॥
शतं जप्ता तु सा देवी पापौघशमना स्मृता ।
सहस्रजप्ता सा देवी ह्युपपातकनाशिनी ॥
कोटिजापेन गायत्र्या यदिच्छति तदाप्नुयात् ।
यक्षविद्याधरत्वं वा गन्धर्वत्वमथापि वा ॥
देवत्वमथवा राज्यं भूलोकं चाप्यकण्टकम् ॥ इति ॥

𑌵𑍍𑌯𑌾𑌸𑌃—𑌦𑌶𑌕𑍃𑌤𑍍𑌵𑌃𑌪𑍍𑌰𑌜𑌪𑍍𑌤𑌾 𑌸𑌾 𑌤𑍍𑌰𑍍𑌯𑌹𑌾𑌦𑍍𑌯𑌤𑍍𑌕𑍃𑌤𑌂 𑌲𑌘𑍁 ।
𑌤𑌤𑍍𑌪𑌾𑌪𑌂 𑌪𑍍𑌰𑌣𑍁𑌦𑌤𑍍𑌯𑌾𑌶𑍁 𑌨𑌾𑌤𑍍𑌰 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾 𑌵𑌿𑌚𑌾𑌰𑌣𑌾 ॥
𑌶𑌤𑌂 𑌜𑌪𑍍𑌤𑌾 𑌤𑍁 𑌸𑌾 𑌦𑍇𑌵𑍀 𑌪𑌾𑌪𑍌𑌘𑌶𑌮𑌨𑌾 𑌸𑍍𑌮𑍃𑌤𑌾 ।
𑌸𑌹𑌸𑍍𑌰𑌜𑌪𑍍𑌤𑌾 𑌸𑌾 𑌦𑍇𑌵𑍀 𑌹𑍍𑌯𑍁𑌪𑌪𑌾𑌤𑌕𑌨𑌾𑌶𑌿𑌨𑍀 ॥
𑌕𑍋𑌟𑌿𑌜𑌾𑌪𑍇𑌨 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍍𑌯𑌾 𑌯𑌦𑌿𑌚𑍍𑌛𑌤𑌿 𑌤𑌦𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌤𑍍 ।
𑌯𑌕𑍍𑌷𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌧𑌰𑌤𑍍𑌵𑌂 𑌵𑌾 𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑌤𑍍𑌵𑌮𑌥𑌾𑌪𑌿 𑌵𑌾 ॥
𑌦𑍇𑌵𑌤𑍍𑌵𑌮𑌥𑌵𑌾 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 𑌭𑍂𑌲𑍋𑌕𑌂 𑌚𑌾𑌪𑍍𑌯𑌕𑌣𑍍𑌟𑌕𑌂 ॥ 𑌇𑌤𑌿 ॥

मनु: —योऽधीतेऽहन्यहन्येतां त्रीणि वर्षाण्यतन्द्रित: ।
स ब्रह्म परमभ्येति वायुभूत: खमूर्तिमान् ॥ इति ॥

𑌨𑍍𑌦𑍍𑌰𑌃 𑌯𑍋𑌽𑌧𑍀𑌤𑍇𑌽𑌹𑌨𑍍𑌯𑌹𑌨𑍍𑌯𑍇𑌤𑌾𑌂 𑌤𑍍𑌰𑍀𑌣𑌿 𑌵𑌰𑍍𑌷𑌾𑌣𑍍𑌯𑌤𑌨𑍍𑌦𑍍𑌰𑌿-
𑌤𑌃। 𑌸 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌪𑌰𑌮𑌭𑍍𑌯𑍇𑌤𑌿 𑌵𑌾𑌯𑍁𑌭𑍂𑌤𑌃 𑌖𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌮𑌾𑌨𑍍॥ 𑌇𑌤𑌿॥

"பத்துமுறை காயத்ரீ ஜபிக்கப்பட்டதாயின் மூன்று தினங்களிற் செய்த சகல பாபங்களையும் துலைக்குமென்பதில் சற்றும் ஐயமில்லை. நூறு தடவை ஜபித்தானுயின் சகலபாதகங்களையும் போக்கும். ஆயிரம் தடவை ஜபித்தானுயின் உபபாதகங்களுடன் சகல பாதகங்களும் விலகும். கோடி முறை ஜபித்தானுயின் யக்ஷர், வித்யாதரர், கந்தர்வர், தேவர் இவர்களின் தன்மையைக் கோரினபோதிலும், ராஜ்யத்தை அபேக்ஷித்தபோதிலும், இப்பூமண்டலத்தையே இச்சித்தபோதிலும் யாதொரு தடையுமின்றியே அடைந்துவிடுவன். எவனொருவன் சோம்பலின்றியே மூன்று வருஷம் ஒவ்வொரு தினமும் (ஆயிரம் தடவை வீதம்) காயத்திரீ ஜபஞ்செய்வனே, அவன் சகல பந்தங்களும் நீங்கினவனுய் பிரும்மத்தை அடைவான்" என்பனவாம். ஆகவே மேற்கூரிய வசனங்களினின்றும் இந்த ஸந்தியானுஷ்டானமானது விசேஷப் பயனைத் தரத்தக்கதென்று ஏற்பட்டுவிட்டது.

ஆகையாற்றான் விசேஷப் பயனைத் தரத்தக்க இந்தக் காயத்ரீ உபாஸனத்தை ஒவ்வொருவனும் தவருது அனுஷ்டித்து இம்மை மருமைகளிற் சகல க்ஷேமங்களையும் அடைய வேண்டியது அவசியமெனக் கருதியே நம் பெரியோர் இதை 8-வயது முதற்கொண்டே நமக்கு ஏற்படுத்தி இருக்கின்றனர். ஆகவே ஸந்தியானுஷ்டானத்தில் உபயோகிக்கப்படும் மந்திரங்களை

**यदेव विद्यया करोति श्रद्धयोपनिषदा तदेव वीर्यवत्तरं भवति।**
**अर्थज्ञ इत्सकलं भद्रमश्नुते स नाकमेति ज्ञानविधूतपाप्मा।**

யதே³வ வித்³யயா கரோதி ஶ்ரத்³த⁴யோபநிஷதா³ ததே³வ வீர்யவத்தரம் ப⁴வதி ॥ அர்த²ஜ்ஞ இத்ஸகலம் ப⁴த்³ரமஶ்நுதே ஸ நாகமேதி ஜ்ஞாநவிதூ⁴தபாப்மா ।

“அர்த்தமறிந்தவன் சகல க்ஷேமத்தையும் அடைவதுடன் ஞானத்தால் விலகின பாபமுள்ளவனாய் மேலானபதவியை அடைகிறான்” என்றபடி அர்த்தானுஸந்தானத்துடன் ஜபித்தல் அவசியமாகின்றதால் அம்மந்திரங்களின் அர்த்தத்தை எளிதில் யாவரும் அறியுமாறு மகான்களால் இயற்றப்பெற்ற பல பாஷ்யங்களுக்கிணங்க ஸம்பிரதாயத்தையும், எனது தைய்வமான ஸ்ரீ கோபாலனுடையவும் எனது குருநாதனுடையவும் கிருபையையும் முன்னிட்டு எளிய தமிழ் நடையில் மொழி பெயர்க்கத் தொடங்குகிறோம்.

இம்மொழி பெயர்ப்பில் ருக், யஜுஸ், ஸாமசாகைகளை யொட்டி இந்த ஸந்தியானுஷ்டானத்தில் உபயோகிக்கப் படும் மந்திரங்களையும் மொழி பெயர்ப்பதாகச் ஸங்கற்பித்திருக்கின்றோமாயினும் முதன் முதலில் யஜுர்வேதிகளின் ஸம்பிரதாயப்படி மொழிபெயர்த்து எழுதுகிறோம்.

பொதுவாய் மந்திரத்தை யுச்சரித்து ஒருவன் ஒரு கர்மத்தைச் செய்யத்தொடங்கு முன்னர் அந்தந்த மந்திரத்திற்குரிய ருஷி, சந்தஸ், தேவதை, விநியோகம், இவைகளை யறிந்தே செய்யவேண்டு மென்றும் அவ்விதஞ்செய்யாதவன் அதன் பயனை யடைவதில்லை என்றும் யோகயாக்ஞவல்கியர், ஹாரீதர் முதலிய மஹருஷிகள்

अविदित्वा ऋषिच्छन्दोदैवतं योगमेवच ।
योध्यापयेद्यजेद्वापि पापीयान् जायते तु सः ॥

𑌅𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑌾 𑌋𑌷𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌦𑍋𑌦𑍈𑌵𑌤𑌂 𑌯𑍋𑌗𑌮𑍇𑌵𑌚 ।
𑌯𑍋𑌧𑍍𑌯𑌾𑌪𑌯𑍇𑌦𑍍𑌯𑌜𑍇𑌦𑍍𑌵𑌾𑌪𑌿 𑌪𑌾𑌪𑍀𑌯𑌾𑌨𑍍 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌤𑍁 𑌸𑌃 ॥

என்றதால் சொல்லியிருப்பதால் அவ்விதமே செய்ய வேண்டுவதவசியமாகின்றது. ஆனதுபற்றியே ஒவ்வொரு மந்திரத்திற் கும் ருஷி, சந்தஸ் தேவதை இவைகளைச் சாஸ் திரங்களிற்சொல்லியபடி குறிப்பிட்டு வியாக்கியானஞ் செய் கிறோம்.

## ॥ अथसंध्यानुष्ठानक्रमः ॥

இனி ஸந்தியானுஷ்டானஞ் செய்யவேண்டிய முறை.

ब्राह्मे मुहूर्ते चोत्थाय चिन्तयेदात्मनो हितम् ।
गुरुं विष्णुं नमस्कृत्य मातापित्रोस्तथैव ॥

𑌅𑌥𑌸𑌂𑌧𑍍𑌯𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌕𑍍𑌰𑌮𑌃

𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑍇 𑌮𑍁𑌹𑍂𑌰𑍍𑌤𑍇 𑌚𑍋𑌤𑍍𑌥𑌾𑌯 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑍇𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑍋 𑌹𑌿𑌤𑌮𑍍 ।
𑌗𑍁𑌰𑍁𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂 𑌨𑌮𑌸𑍍𑌕𑍃𑌤𑍍𑌯 𑌮𑌾𑌤𑌾𑌪𑌿𑌤𑍍𑌰𑍋𑌸𑍍𑌤𑌥𑍈𑌵 𑌚 ॥

சூரியோதயத்திற்கு முன்னுள்ள பாதியாமத்தில் இர ண்டு முகூர்த்தங்களுண்டு. அவற்றுள் முதலாவது முகூர்த் தம் "ப்ராம்ஹம்" என்றும், இரண்டாவது முகூர்த்தம் "ரௌத்ரம்" என்றும் சொல்லப்படும். அவற்றுள் முதலா வது பிராம்ஹ முகூர்த்தத்தில் படுக்கையை விட்டெழுந்து குருவையும், விஷ்ணுவையும், நமஸ்கரித்தும், தாய்தந்தை களுக்கு நமஸ்காரத்தைச் செய்தும், தனக்கு ஹிதமாக இதுவரை செய்யப்பட்டதையும், இனிசெய்யப் படப்போவ தையும் மனத்தா லெண்ணவேண்டும். தூக்கத்தினின்றும்

எழுந்தகாலத்தில் சித்தமானது தெளிந்திருக்குமாதலால் அப்பொழுது சித்தத்திலுதயமாகும் எண்ணங்கள் யாவும் உண்மையானதாகவே தானிருக்கும் என்பது பற்றி இவ்வி தமுபதேசிக்கப்பட்டது. மேலும், அக்காலம் பின்வருவன வற்றையும் ஜபித்தல் வேண்டும்.

दक्षः—ब्रह्मा मुरारिस्त्रिपुरान्तकारिर्भानुश्शशी भूमिसुतो बुधश्च ।
गुरुश्च शुक्रः सहभानुजेन कुर्वन्तु सर्वे मम सुप्रभातम् ॥
भृगुर्वसिष्ठः क्रतुरंगिराश्च मनुः पुलस्त्यः पुलहश्च गौतमः ।
दाल्भ्यो मरीचिश्च्यवनोऽथदक्षः कुर्वन्तु सर्वे मम सुप्रभातम् ॥
सनत्कुमारश्च सनन्दनश्च सनातनोप्यासुरिसिंहळौ च ।
सप्तस्वरास्सप्तरसातलानि कुर्वन्तु सर्वे मम सुप्रभातम् ॥
सप्तार्णवास्सप्तकुलाचलाश्च सप्तर्षयश्चोपवनानि सप्त ।
भूरादिलोका भुवनानि सप्त कुर्वन्तु सर्वे मम सुप्रभातम् ॥
पृथ्वीसगंधा सरसास्तथाऽऽपः स्पर्शश्च वायुर्ज्वलितञ्च तेजः ।
नभः सशब्दं महता सहैव कुर्वन्तु सर्वे मम सुप्रभातम् ॥
इत्थं प्रभाते परमं पवित्रं पठेत्स्मरेद्वा शृणुयाच्च तद्वत् ।
दुःस्वप्ननाशस्त्विह सुप्रभातं भवेच्च नित्यं भगवत्प्रसादात्॥ इति

स्मृतिरत्ने—महाभारतमाख्यानं क्षितिं गां च सरस्वतीम् ।
ब्राह्मणान्केशवञ्चैव प्रातरुत्थाय कीर्तयेत् ॥
ब्रह्माणं शंकरं विष्णुं यमं रामं दनुं बलिम् ।
सप्तैतान्संस्मरेन्नित्यं दुस्वप्नस्तस्य नश्यति ॥
पुण्यश्लोको नळो राजा पुण्यश्लोको युधिष्ठिरः ।
पुण्यश्लोका च वैदेही पुण्यश्लोको जनार्दनः ॥
कार्कोटकस्य नागस्य दमयन्त्या नळस्य च ।
ऋतुपर्णस्य राजर्षेः कीर्तनं कलिनाशनम् ॥ इति

शांडिल्यः—उच्चैः स्वरेण यः प्रातस्तोतुमिच्छेदनन्यधीः
वासुदेवादिदेवानां नामसंकीर्तनं चरेत् ॥ इति

𑌉𑌕𑍍𑌤𑌃—𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌮𑍁𑌰𑌾𑌰𑌿𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌪𑍁𑌰𑌾𑌨𑍍𑌤𑌕𑌾𑌰𑍀 𑌭𑌾𑌨𑍁𑌶𑍍𑌶𑌶𑍀
𑌭𑍂𑌮𑌿𑌸𑍁𑌤𑍋 𑌬𑍁𑌧𑌶𑍍𑌚 । 𑌗𑍁𑌰𑍁𑌶𑍍𑌚 𑌶𑍁𑌕𑍍𑌰𑌃
𑌶𑌨𑌿𑌰𑌾𑌹𑍁𑌕𑍇𑌤𑌵𑌃 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑍁 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌮𑌮 𑌸𑍁𑌪𑍍𑌰𑌭𑌾𑌤𑌂 ॥

𑌭𑍃𑌗𑍁𑌰𑍍𑌵𑌸𑌿𑌷𑍍𑌠𑌃 𑌕𑍍𑌰𑌤𑍁𑌰𑌙𑍍𑌗𑌿𑌰𑌾𑌶𑍍𑌚 𑌮𑌨𑍁𑌃
𑌪𑍁𑌲𑌸𑍍𑌤𑍍𑌯𑌃 𑌪𑍁𑌲𑌹𑌶𑍍𑌚 𑌗𑍌𑌤𑌮𑌃 । 𑌰𑍈𑌭𑍍𑌯𑍋 𑌮𑌰𑍀𑌚𑌿𑌶𑍍𑌚𑍍𑌯𑌵𑌨𑍋𑌽𑌥
𑌦𑌕𑍍𑌷𑌃 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑍁 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌮𑌮 𑌸𑍁𑌪𑍍𑌰𑌭𑌾𑌤𑌂 ॥

𑌸𑌨𑌤𑍍𑌕𑍁𑌮𑌾𑌰𑌸𑍍𑌸𑌨𑌕𑌸𑍍𑌸𑌨𑌨𑍍𑌦𑌨𑌸𑍍𑌸𑌨𑌾𑌤𑌨𑍋
𑌽𑌪𑍍𑌯𑌾𑌸𑍁𑌰𑌿𑌪𑌿𑌙𑍍𑌗𑌲𑍌 𑌚 । 𑌸𑌪𑍍𑌤 𑌸𑍍𑌵𑌰𑌾𑌸𑍍𑌸𑌪𑍍𑌤
𑌰𑌸𑌾𑌤𑌲𑌾𑌨𑌿 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑍁 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌮𑌮 𑌸𑍁𑌪𑍍𑌰𑌭𑌾𑌤𑌂 ॥

𑌸𑌪𑍍𑌤𑌾𑌰𑍍𑌣𑌵𑌾𑌸𑍍𑌸𑌪𑍍𑌤𑌕𑍁𑌲𑌾𑌚𑌲𑌾𑌶𑍍𑌚 𑌸𑌪𑍍𑌤𑌰𑍍𑌷𑌯𑍋
𑌦𑍍𑌵𑍀𑌪𑌵𑌨𑌾𑌨𑌿 𑌸𑌪𑍍𑌤 । 𑌭𑍂𑌰𑌾𑌦𑌿𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌭𑍁𑌵𑌨𑌾𑌨𑌿
𑌸𑌪𑍍𑌤 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑍁 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌮𑌮 𑌸𑍁𑌪𑍍𑌰𑌭𑌾𑌤𑌂 ॥

𑌪𑍃𑌥𑍍𑌵𑍀 𑌸𑌗𑌨𑍍𑌧𑌾 𑌸𑌰𑌸𑌾𑌸𑍍𑌤𑌥𑌾𑌪𑌃 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑍀 𑌚
𑌵𑌾𑌯𑍁𑌰𑍍𑌜𑍍𑌵𑌲𑌿𑌤𑌞𑍍𑌚 𑌤𑍇𑌜𑌃 । 𑌨𑌭𑌸𑍍𑌸𑌶𑌬𑍍𑌦𑌂 𑌮𑌹𑌤𑌾
𑌸𑌹𑍈𑌵 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑍁 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌮𑌮 𑌸𑍁𑌪𑍍𑌰𑌭𑌾𑌤𑌂 ॥

𑌇𑌤𑍍𑌥𑌂 𑌪𑍍𑌰𑌭𑌾𑌤𑍇 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌂 𑌪𑌠𑍇𑌤𑍍𑌸𑍍𑌮𑌰𑍇𑌦𑍍𑌵𑌾
𑌶𑍃𑌣𑍁𑌯𑌾𑌚𑍍𑌚 𑌤𑌦𑍍𑌵𑌤𑍍 । 𑌦𑍁𑌃𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌨𑌾𑌶𑌸𑍍𑌤𑍍𑌵𑌿𑌹
𑌸𑍁𑌪𑍍𑌰𑌭𑌾𑌤𑌂 𑌭𑌵𑍇𑌚𑍍𑌚 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌭𑌗𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌤𑍍 ॥ 𑌇𑌤𑌿

𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌰𑌤𑍍𑌨𑍇—[illegible] 𑌵𑍍𑌯𑌾𑌸𑌂 𑌕𑍍𑌷𑌿𑌤𑌿𑌂 [illegible]
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌂 𑌕𑍇𑌶𑌵𑌞𑍍𑌚𑍈𑌵 𑌪𑍍𑌰𑌾𑌤𑌰𑍁𑌤𑍍𑌥𑌾𑌯 𑌕𑍀𑌰𑍍𑌤𑌯𑍇𑌤𑍍 ॥

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌂 𑌶𑌙𑍍𑌕𑌰𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂 𑌯𑌮𑌂 𑌰𑌾𑌮𑌂 𑌦𑌨𑍁𑌂 𑌬𑌲𑌿𑌂 ।
𑌸𑌪𑍍𑌤𑍈𑌤𑌾𑌨𑍍 𑌸𑌂𑌸𑍍𑌮𑌰𑍇𑌨𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌦𑍁𑌃𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌨𑌶𑍍𑌯𑌤𑌿 ॥

𑌪𑍁𑌣𑍍𑌯𑌶𑍍𑌲𑍋𑌕𑍋 𑌨𑌲𑍋 𑌰𑌾𑌜𑌾 𑌪𑍁𑌣𑍍𑌯
𑌶𑍍𑌲𑍋𑌕𑍋 𑌯𑍁𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌰𑌃 । 𑌪𑍁𑌣𑍍𑌯𑌶𑍍𑌲𑍋𑌕𑌾 𑌚
𑌵𑍈𑌦𑍇𑌹𑍀 𑌪𑍁𑌣𑍍𑌯𑌶𑍍𑌲𑍋𑌕𑍋 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑌃 ॥

𑌕𑌾𑌰𑍍𑌕𑍋𑌟𑌕𑌸𑍍𑌯 𑌨𑌾𑌗𑌸𑍍𑌯 𑌦𑌮𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌾 𑌨𑌲𑌸𑍍𑌯 𑌚 ।
𑌋𑌤𑍁𑌪𑌰𑍍𑌣𑌸𑍍𑌯 𑌰𑌾𑌜𑌰𑍍𑌷𑍇𑌃 𑌕𑍀𑌰𑍍𑌤𑌨𑌂 𑌕𑌲𑌿𑌨𑌾𑌶𑌨𑌂 ॥ 𑌇𑌤𑌿
𑌪𑍍𑌰𑌾𑌤𑌃𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯𑌃 — [illegible] 𑌯𑌃 𑌪𑍍𑌰𑌾𑌤𑌃
[illegible] 𑌪𑌠𑍇𑌤𑍍 𑌸𑍁𑌧𑍀𑌃 । 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌾𑌦𑌿
𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌨𑌾𑌮𑌸𑌙𑍍𑌕𑍀𑌰𑍍𑌤𑌨𑌂 [illegible] ॥ 𑌇𑌤𑌿 ॥

(க—ரை) பிரும்மா, முராரி, (விஷ்ணு) திரிபுரம் அந்தகன் இவர்களை அழித்தவர் (சிவன்) சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, இவர்கள் எனது விஷயத்தில் விடியற்காலத்தை நல்லதாகச் செய்யட்டும். பிருகு, வஸிஷ்டர், க்ரது, அங்கிரஸ், மனு, புலஸ்த்யர், புலஹர், கௌதமர், தால்ப்யர், மரீசி, ச்யவனர், தக்ஷர், ஆகிய இந்தமஹருஷிகள் எனது விஷயத்தில் விடியற்காலத்தை நல்லதாகச்செய்யட்டும். ஸநத்குமாரர், ஸநந்தனர், ஸநாதனர், ஆஸுரி, ஸிம்ஹளர், ஏழுஸ்வரங்கள், ஏழுரஸாதலங்கள், ஆகிய இவைகள் என்விஷயத்தில் விடியற்காலத்தை நல்லதாகச் செய்யட்டும். ஏழுசமுத்திரங்கள், ஏழு குலாசலங்கள், ஸப்தர்ஷிகள், ஏழு உபவனங்கள், பூராதி ஏழு லோகங்கள், ஏழுபுவனங்கள் இவைகள் எனது விஷயத்தில் விடியற்காலத்தை நல்லதாகச்செய்யட்டும். கந்தத்துடன் கூடின பூமியும், ரஸத்துடன் கூடின ஜலங்களும், ஸ்பர்சமுள்ள வாயுவும், ஜ்வலிக்கும் அக்னியும், சப்தத்துடன் கூடின ஆகாசமும், மஹத்தத்துவத்துடன் கூடவே எனது விஷயத்தில் விடியற்காலத்தை நல்லதாகச் செய்யட்டும். எவனொருவன் விடியற்

காலத்தில் இதுவரை கூறிய பவித்திரமான (ஸ்தோத்திரத்தை) படிக்கவோ கேட்கவோ, நினைக்கவோ செய்வனே அவன் விஷயத்தில் பகவத்பிரஸாதத்தால் துஸ்வப்னநாசமும் நல்லவிடியற்காலமும் உண்டாகும் என்று தக்ஷரும், மஹாபாரதம், பூமி, ஆகாசம், ஸரஸ்வதீ, பிராம்மணர்கள், கேசவர், இவர்களேயும், பிரும்மதேவன், சங்கரன், விஷ்ணு, யமன், ராமன், தனு, பலிசக்கிரவர்த்தி ஆகிய இவ்வேழு பேர்களேயும் எவனொருவன் காலேயிலெழுந்து நினைக்கின்றனே அவனுக்கு கெட்டஸ்வப்பினமூலம் தோஷம் நேராததுடன்; பின்னர்கெட்ட ஸ்வப்பினமே உண்டாவதில்லே. புண்ணியசுலோகனுன நளன், யுதிஷ்டிரர், ஸீதை, ஜனர்த்தனன், கார்க்கொடகன் என்ற நாகன், தமயந்தீ, நளன், ருதுபர்ணராஜன், இவர்களேப் பாடுவதால் கலகம், பாபம் முதலிய தோஷம் நீங்கும், எனஸ்மிருதிரத்தினத்திலும், காலேயிலெழுந்து வாஸுதேவன் முதலியதேவர்களுடைய நாமஸங்கீர்த்தனத்தை உறத்தகுரலுடன் பாடவேண்டும் என்று சாண்டில்யரும் சொல்லியிருக்கின்றனர். (எ—று) பிறகு

दूरादावसथान्मूत्रं दूरादावसथान्मलम् ।

தூராதாவஸதாந்மூத்ரம் தூராதாவஸதாந்மலம் ।

என்ற வசனப்படி வீட்டிற்கு வெகுதூரஞ் சென்று மலமூத்திரங்களேக் கழித்துக்கொண்டும்,

गन्धलेपक्षयकरं शौचं कुर्याद्यथाविधि ।

கந்தலேபக்ஷயகரம் ஶௌசம் குர்யாத்யதாவிதி ।

என்றபடி நாற்றத்தின் பற்றறச் சௌசத்தை முறைப்படி செய்துகொண்டும்,

सततं प्रातरुत्थाय दन्तधावनपूर्वकम् ।
आचरेदुषसि स्नानं तर्पयेद्देवमानुषान् ॥

ஸததம் ப்ராதருத்தாய தந்ததாவநபூர்வகம் ।
ஆசரேதுஷஸி ஸ்நாநம் தர்பயேத்தேவமாநுஷாந் ॥

என்ற ஜாபாலியின் வசனப்படி முதலில் பல் துலக்கிக் கொண்டு பிறகு ஸ்நானஞ்செய்து தேவருஷி பிதிருக்களை யுத்தேசித்துத் தர்ப்பணஞ் செய்யவேண்டும்.

क्षुभ्यन्ति हि सुप्तस्य स्वेन्द्रियाणि स्रवन्ति च ।
अङ्गानि समतां यान्ति ह्युत्तमान्यधमैस्सह ।
अत्यन्तमलिनः कायो नवच्छिद्रसमन्वितः
स्रवत्येव दिवारात्रं प्रातस्स्नानं विशोधनम् ॥
प्रातस्स्नानं प्रशंसन्ति दृष्टादृष्टकरं हि तत् ॥

க்ஷுப்யந்தி ஹி ஸுப்தஸ்ய ஸ்வேந்த்ரியாணி ஸ்ரவந்தி ச ।
அங்காநி ஸமதாம் யாந்தி ஹ்யுத்தமாந்யதமைஸ்ஸஹ ।
அத்யந்தமலிநஃ காயோ நவச்சித்ரஸமந்விதஃ ।
ஸ்ரவத்யேவ திவாராத்ரம் ப்ராதஸ்ஸ்நாநம் விசோதநம் ।
ப்ராதஸ்ஸ்நாநம் ப்ரசம்ஸந்தி த்ருஷ்டாத்ருஷ்டகரம் ஹிதத் ॥

“மனிதன் தூங்குகையில் இந்திரியங்கள்யாவும் கலக்கத்தை யடைந்து, பரிசுத்தமான இந்திரியம், தாழ்மையான இந்திரியம் எல்லாம் ஸமமாகவே யாகின்றன. ஆகையாற்றான் ஒன்பது துவாரங்களடர்ந்த சரீரம் மாலிந்யத்தை யடைகின்றது. இவைகளைச் சுத்திசெய்து சரீரத்திற்கு மிகுந்த ஆரோக்யத்தை யளிப்பதற்கு ஸ்நானத்தைவிட மேலானது எதுவுமில்லை. ஆகையாற்றான் முதலில் திருஷ்

டமான பயனைத்தந்து பின்னர் அதிருஷ்டமான பயனைத் தரும் அந்த ஸ்நானத்தைப் பெரியார் புகழ்கின்றனர்" என்று தக்ஷரும்,

गुणा दश स्नानपरस्य साध्या रूपं च तेजश्च बलं च शौचम् ।
आयुष्यमारोग्यमलोलुपत्वं दुःस्वप्ननाशश्च धृतिश्च मेधा ॥

குணா தஶ ஸ்நாநபரஸ்ய ஸாத்யா ரூபம் ச
தேஜஶ்ச பலம் ச ஶௌசம் । ஆயுஷ்யமாரோக்ய
மலோலுபத்வம் து:ஸ்வப்நநாஶஶ்ச த்ருதிஶ்ச மேதா ॥

"ஸ்நானஞ் செய்துகொண்டு வருகின்றவனுக்கு ரூபம், காந்தி, பலம், சௌசம், ஆயுள், ஆரோக்கியம், தைரியம், துஸ்வப்ன நாசம், தாரணை, அறிவு ஆகிய பத்து குணங்களு முண்டாகின்றன." என்று அத்திரி முதலிய மஹருஷிகள் ஸ்நானத்தைப் புகழ்ந்திருப்பதாலும், பிராதஸ்நானஞ் செய்கின்றவர்களிடத்து இங்கு சொல்லிய திருஷ்டபலனைக் கண் கூடாகக் கண்டு மிருப்பதாலும் பிராதஸ்நான மவஸ்யமாகின்றது. மேலும்,

अस्नात्वा नाचरेत्कर्म जपहोमादि किंचन ।

அஸ்நாத்வா நாசரேத்கர்ம ஜபஹோமாதி கிஞ்சந ।

"ஸ்நானஞ் செய்யாமல் ஜபம் ஹோமம் முதலிய எக்கர்மத்தையும் செய்தல் தகா" என்று தக்ஷர் முதலியோர் தடுத்திருப்பதால் ஸந்தியானுஷ்டானஞ் செய்வதற்கு முன்னர் ஸ்நானஞ்செய்தே தீரவேண்டுமென்று ஏற்படுகிறது. பிறகு தேவருஷி பிதுருதர்ப்பணஞ்செய்தும்,

यन्मया दूषितं तोयं शारीरमलसंचयैः ।
तद्दोषपरिहाराय यक्ष्माणं तर्पयाम्यहम् ॥

யதூபா தூஷிதம் தோயம் பரீரமலஸம்பவை: ।
தத்தோஷபரிஹாராய யக்ஷ்மாணம் தர்பயாம்யஹம் ॥

என்ற ஶ்லோகரூபமான மந்திரத்தைச் சொல்லிக்கொண்டு யக்ஷ்ம தர்ப்பணஞ் செய்தும்,

**......वाससः । खण्डद्वयेन क्रमशश्शिरोऽङ्गं परिमार्जयेत् ॥**

வாஸஸ: । வண்டத்வயேந க்ரமஶஶ்ஶிரோங்கம் பரிமார்ஜயேத் ॥

என்ற வசனப்படி இருதுண்டான வஸ்திரங்களின் ஓர் துண்டால், தலையையும், மற்றொரு துண்டால் மற்ற அங்கங்களையும் துடைத்துக்கொண்டும், வெண்ணிறமுள்ளதும், உணர்ந்ததுமான வஸ்திரத்தைத் தரித்துக்கொண்டும், காலை அலம்பி ஆசமனஞ் செய்துகொண்டும், தத்தமது பரம்பராக் கிரமத்தை யொட்டி புண்ட்ரதாரணஞ் செய்துகொள்ளவேண்டும். புரண்ட்ரதாரணஞ் செய்யும் விஷயத்தில்,

**शिखां पुण्ड्रं च सूत्रं च समयाचारमेव च ।**
**पूर्वैराचरितं कुर्यादन्यथा पतितो भवेत् ॥**

ஶிகாம் புண்ட்ரஞ்ச ஸூத்ரஞ்ச ஸமயாசாரமேவ ச ।
பூர்வைராசரிதம் குர்யாதந்யதா பதிதோ பவேத் ॥

என்ற வசனத்தை யொட்டி தத்தம்பெரியோர் செய்து வந்தமுறைப்படியே **विभूति** (விபூதி) (விபூதி) கோபீசந்தனம், திருமண் முதலிவற்றுள் யாதானு மொன்றைக்கொண்டே புண்ட்ரதாரணஞ்செய்யவேண்டு மென்பது அவசியமாகின்றது.

சங்கை—இப்புரண்ட்ரதாரண விஷயத்திற் சிலர் திரு புண்ட்ரத்தையும், சிலர் ஊர்த்வ புண்ட்ரத்தையும், புகழ்ந்து மிகழ்ந்து இருக்கின்றனரே. இவ்விஷயத்தில் எதை உத்த

மமாகக்கொள்வது. மேலும் அப்புண்ட்ரதாரணத்தை விதித்தவர் கருத்துத்தானென்னே?

உத்தரம்:—மஹாராஜா முதலியவர்களை ஓர் ஊரினுள்ளதனது வீட்டில் வரவழைத்து அவருக்கு மரியாதை செய்யும் வாயிலாகத் தனது அபீஷ்டங்களை அவரிடமிருந்து அடையவிருப்பமுள்ளவன், அம்மஹாராஜன் வந்து தங்குமிடமானது தனது வீட்டினுள்ளில் ஏதோ ஒரு இடமாயினும் தனது வீடு முழுவதையுமே பெருக்கி, மொழுகி, இழைக்கோலத்தாலோ, மாவுக்கோலத்தாலோ, காவி சுண்ணம்பு இவைகளால் பட்டையடித்தோ அலங்கரிக்கின்றானன்றோ. அதுபோலவே ஆதிகர்த்தாவான பரம்பொருளைத் தமது சரீரமாகிற வீட்டின் ஏகதேசமான மனதில் வரும்படி வேண்டி வரவழைத்துத் தியானஞ்செய்து அத்தியானப் பிரபாவத்தால் தாம் கோறியதை அவரிடமிருந்து அடைய விருப்பமுள்ள இந்த ஜீவர்கள் அவர் வந்து தங்குமிடமான இச்சரீரத்தில் மாவாற்கோலம் போடுவதுபோல விபூதியைப் பூசியோ, இழைக்கோலம் போடுவதுபோலக் கோபீ முதலியதை யிட்டோ அலங்கரித்தல் அவசியமெனச் சாஸ்திரம் விதித்தமையால், அவ்விஷயத்தில் என் கோலம் மேலானது, உன்கோலம் கீழானது என்று வீணில் வாதஞ் செய்வதில் பயன் யாதுமில்லை என்றும், எவரெவர் எதெதை வழக்கமாகச் செய்யக்கூடுமோ அதனையே செய்யவேண்டுமே யல்லாது மற்றவர் செய்வதைத் தூஷிக்கவோ பூஷிக்கவோ செய்வது முற்றும் பொருத்தமான காரியமல்லவென்றும் காட்டவே ஸர்வக்ஞர்களான மஹருஷிகள் இவ்விஷயத்தில் ஒருமைப்படாது பற்பலஅபிப்பிராயங்களை வெளி

யிட்டனர் என்று கொள்ளவேண்டும். ஆகவே தத்தமது குலாசாரத்தை யோட்டிப் புண்ட்ரதாரணஞ்செய்துகொள்வதுதான் உத்தமமென்று ஏற்படுகின்றது.

अथ प्राङ्मुख उदङ्मुखो वा उपविश्य संध्योपासनमारभमाणः यथासंप्रदायमाचमनं कुर्यात्

𑌅𑌥 𑌪𑍍𑌰𑌾𑌙𑍍𑌮𑍁𑌖 𑌉𑌦𑌙𑍍𑌮𑍁𑌖𑍋 𑌵𑌾 𑌉𑌪𑌵𑌿𑌶𑍍𑌯 𑌸𑌂𑌧𑍍𑌯𑍋𑌪𑌾𑌸𑌨𑌮𑌾𑌰𑌭𑌮𑌾𑌣𑌃 𑌯𑌥𑌾𑌸𑌂𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑌮𑌾𑌚𑌮𑌨𑌂 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 ।

பிறகு கிழக்குமுகமாகவோ வடக்குமுகமாகவோ உட்கார்ந்து ஸந்தியோபாஸனஞ் செய்யத் தொடங்குகின்றவன் ஸம்பிரதாயத்தை யொட்டி ஆசமனஞ் செய்து கொள்ள வேண்டும்.

अथाचमन मन्त्रः ॥

अच्युताय नमः । अनन्ताय नमः । गोविन्दाय नमः । केशव । नारयण । माधव । गोविन्द । विष्णो । मधुसूदन । त्रिविक्रम । वामन श्रीधर । हृषीकेश । पद्मनाभ । दामोदर ।

(𑌅𑌥𑌾𑌚𑌮𑌨 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌃 ॥)

𑌅𑌚𑍍𑌯𑍁𑌤𑌾𑌯 𑌨𑌮𑌃। 𑌅𑌨𑌨𑍍𑌤𑌾𑌯 𑌨𑌮𑌃। 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦𑌾𑌯 𑌨𑌮𑌃। 𑌕𑍇𑌶𑌵। 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣। 𑌮𑌾𑌧𑌵। 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦। 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋। 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨। 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌕𑍍𑌰𑌮। 𑌵𑌾𑌮𑌨। 𑌶𑍍𑌰𑍀𑌧𑌰। 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶। 𑌪𑌦𑍍𑌮𑌨𑌾𑌭। 𑌦𑌾𑌮𑍋𑌦𑌰।

(அத ஆசமன மந்த்ர: ॥)

அச்யுதாய நம: | அநந்தாய நம: | கோவிந்தாய நம: | கேசவ | நாராயண | மாதவ | கோவிந்த | விஷ்ணோ | மதுஸூதன | த்ரிவிக்ரம | வாமன | ஸ்ரீதர | ஹ்ருஷீகேச | பத்மநாப | தாமோதர |

*பிறகு ஸ்மார்த்த ஸம்பிரதாயப்படி*

**शुक्लांबरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम् ।**
**प्रसन्नवदनं ध्यायेत्सर्वविघ्नोपशान्तये ॥**

𑌶𑍁𑌕𑍍𑌲𑌾𑌂𑌬𑌰𑌧𑌰𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂 𑌶𑌶𑌿𑌵𑌰𑍍𑌣𑌂 𑌚𑌤𑍁𑌰𑍍𑌭𑍁𑌜𑌂 ।
𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌵𑌦𑌨𑌂 𑌧𑍍𑌯𑌾𑌯𑍇𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌘𑍍𑌨𑍋𑌪𑌶𑌾𑌨𑍍𑌤𑌯𑍇 ॥

சுக்லாம்பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்ப்புஜம் ।
ப்ரஸன்னவதனம் த்யாயேத் ஸர்வவிக்னோப சாந்தயே ॥

என்றதை ஜபிக்கவேண்டும். (இதன்பொருள்) **शुक्लांबरधरम्** (𑌶𑍁𑌕𑍍𑌲𑌾𑌂𑌬𑌰𑌧𑌰𑌂 சுக்லாம்பரதரம்)=வெண்ணிறமான வஸ்திரத்தைத்தரித்தவரும் **विष्णुम्** (𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂 விஷ்ணும்)= எங்கும் நிறைந்தவரும் **शशिवर्णम्** (𑌶𑌶𑌿𑌵𑌰𑍍𑌣𑌂 சசிவர்ணம்)=சந்திரன்போன்ற நிறமுள்ளவரும் **चतुर्भुजम्** (𑌚𑌤𑍁𑌰𑍍𑌭𑍁𑌜𑌂 சதுர்ப்புஜம்)=நான்கு கைகளுள்ளவருமான **प्रसन्नवदनम्** (𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌵𑌦𑌨𑌂 ப்ரஸன்னவதனம்)= யானை முகத்தோனை (விநாயகரை) **सर्वविघ्नोपशान्तये** (𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌘𑍍𑌨𑍋𑌪𑌶𑌾𑌨𑍍𑌤𑌯𑍇 ஸர்வவிக்னோப சாந்தயே)=எல்லா இடையூறுகளும் விலக வேண்டி **ध्यायेत्** (𑌧𑍍𑌯𑌾𑌯𑍇𑌤𑍍 த்யாயேத்)=தியானஞ் செய்யக் கடவன்.

## अथप्राणायामः ॥

பிறகுப் பிராணாயாமஞ் செய்யவேண்டும். அதன் மந்திரமும் ருஷி, சந்தஸ் தேவதைகளும் பின்வருமாறு—

**प्रणवस्य ऋषिर्ब्रह्मा । देवी गायत्री छन्दः । परमात्मा देवता । प्राणायामे विनियोगः । भूरादिसप्तव्याहृतीनां अत्रि-भृगु-कुत्स-वसिष्ठ-गौतम-काश्यप-आङ्गिरसा ऋषयः ।गायत्री-उष्णिक्-अनुष्टुप्-बृहती-पङ्क्ति-त्रिष्टुप्-जगत्यः छन्दांसि। अग्नि-वायु-अर्क-वागीश-वरुण-**

इन्द्र-विश्वेदेवा देवताः । गायत्र्या ऋषिर्विश्वामित्रः । देवी गायत्री छन्दः । सविता देवता । प्राणायामेविनियोगः । शिरो मन्त्रस्य, ऋषिः प्रजापतिः । यजुश्छन्दः । अग्नि-वायु-सूर्या देवताः । प्राणा–यामे विनियोगः । ओं भूः । ओं भुवः । ओंस्सुवः । ओं महः । ओं जनः । ओं तपः । ओंसत्यम् । ओं तत्सवितुर्वरेण्यं, भर्गोदेवस्य धीमहि । धियो यो नः प्रचोदयात् ओमापो ज्योतीरसोऽमृतं ब्रह्मभूर्भुवस्सुवरोम् ।

(𑌅𑌥 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑌃)

𑌪𑍍𑌰𑌣𑌵𑌸𑍍𑌯 𑌋𑌷𑌿𑌰𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 । 𑌦𑍇𑌵𑍀 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍀 𑌛𑌨𑍍𑌦𑌃 । 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌦𑍇𑌵𑌤𑌾 । 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑍇 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌃 । 𑌭𑍂𑌰𑌾𑌦𑌿𑌸𑌪𑍍𑌤𑌵𑍍𑌯𑌾𑌹𑍃𑌤𑍀𑌨𑌾𑌂 𑌅𑌤𑍍𑌰𑌿-𑌭𑍃𑌗𑍁-𑌕𑍁𑌤𑍍𑌸-𑌵𑌸𑌿𑌷𑍍𑌠-𑌗𑍌𑌤𑌮-𑌕𑌾𑌶𑍍𑌯𑌪-𑌆𑌙𑍍𑌗𑌿𑌰𑌸𑌾𑌃 𑌋𑌷𑌯𑌃 । 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍀-𑌉𑌷𑍍𑌣𑌿𑌕𑍍-𑌅𑌨𑍁𑌷𑍍𑌟𑍁𑌪𑍍-𑌬𑍃𑌹𑌤𑍀-𑌪𑌙𑍍𑌕𑍍𑌤𑌿-𑌤𑍍𑌰𑌿𑌷𑍍𑌟𑍁𑌪𑍍-𑌜𑌗𑌤𑍍𑌯𑌃 𑌛𑌨𑍍𑌦𑌾𑌂𑌸𑌿 । 𑌅𑌗𑍍𑌨𑌿-𑌵𑌾𑌯𑍁-𑌅𑌰𑍍𑌕-𑌵𑌾𑌗𑍀𑌶-𑌵𑌰𑍁𑌣-𑌇𑌨𑍍𑌦𑍍𑌰-𑌵𑌿𑌶𑍍𑌵𑍇𑌦𑍇𑌵𑌾𑌃 𑌦𑍇𑌵𑌤𑌾𑌃 । 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌃 𑌋𑌷𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌮𑌿𑌤𑍍𑌰𑌃 । 𑌦𑍇𑌵𑍀 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍀 𑌛𑌨𑍍𑌦𑌃 । 𑌸𑌵𑌿𑌤𑌾 𑌦𑍇𑌵𑌤𑌾 । 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑍇 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌃 । 𑌶𑌿𑌰𑍋𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯, 𑌋𑌷𑌿𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌃 । 𑌯𑌜𑍂𑌂𑌷𑌿 𑌛𑌨𑍍𑌦𑌃 । 𑌅𑌗𑍍𑌨𑌿-𑌵𑌾𑌯𑍁-𑌸𑍂𑌰𑍍𑌯𑌾 𑌦𑍇𑌵𑌤𑌾𑌃 । 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑍇 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌃 । 𑌓𑌂 𑌭𑍂𑌃 । 𑌓𑌂 𑌭𑍁𑌵𑌃 । 𑌓𑌂 𑌸𑍁𑌵𑌃 । 𑌓𑌂 𑌮𑌹𑌃 । 𑌓𑌂 𑌜𑌨𑌃 । 𑌓𑌂 𑌤𑌪𑌃 । 𑌓𑌂 𑌸𑌤𑍍𑌯𑌂 । 𑌓𑌂 𑌤𑌤𑍍𑌸𑌵𑌿𑌤𑍁𑌰𑍍𑌵𑌰𑍇𑌣𑍍𑌯𑌂, 𑌭𑌰𑍍𑌗𑍋 𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌧𑍀𑌮𑌹𑌿 । 𑌧𑌿𑌯𑍋 𑌯𑍋 𑌨𑌃 𑌪𑍍𑌰𑌚𑍋𑌦𑌯𑌾𑌤𑍍 । 𑌓𑌮𑌾𑌪𑍋 𑌜𑍍𑌯𑍋𑌤𑍀 𑌰𑌸𑍋𑌽𑌮𑍃𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌭𑍂𑌰𑍍𑌭𑍁𑌵𑌸𑍍𑌸𑍁𑌵𑌰𑍋𑌮𑍍 ।

(அதப்ராணாயாம:)

ப்ரணவஸ்ய ரிஷிர்ப்ரும்மா | தேவீகாயத்ரீசந்த: | பரமாத்மா தேவதா| ப்ராணாயாமே விநியோக:| பூராதிஸப்தவ்

யாஹ்ருதீநாம் அத்ரி-ப்ருகு-குத்ஸ-வஸிஷ்ட-கௌதம-காஶ்யப-ஆங்கிரஸா:ரிஷய:|காயத்ரீ-உஷ்ணிக்-அனுஷ்டுப்-ப்ருஹதீ-பங்க்தி-த்ரிஷ்டுப்-ஜகத்ய:-சந்தாம்ஸி | அக்னி-வாயு-அர்க்க-வாகீஶ.வருண-இந்த்ர-விஶ்வேதேவா தேவதா: | காயத்ர்யா ரிஷிர்விஶ்வாமித்ர:| தேவீ காயத்ரீ சந்த:| ஸவிதா தேவதா| ப்ராணாயாமேவிநியோக:| சிரோ மந்த்ரஸ்ய, ரிஷி: ப்ரஜாபதி: | யஜுஸ்சந்த: | அக்னி-வாயு-ஸூர்யா தேவதா: | ப்ராணாயாமே விநியோக: | ஓம் பூ: | ஓம் புவ:| ஓம் ஸுவ: | ஓம் மஹ: | ஓம் ஜன:| ஓம் தப: | ஓம்ஸத்யம் | ஓம் தத்ஸவிதுர்வ ரேண்யம், பர்க்கோதேவஸ்ய தீமஹி | தியோ யொ ந: ப்ரசோதயாத்| ஓமாபோ ஜ்யோதீரஸோம்ருதம் ப்ரும்ஹ பூர்ப்புவஸ்ஸுவரோம் |

பிராணாயாமமந்திரத்தின் முதலிலிருக்கின்ற பிரணவத்திற்கு ருஷிபிரும்மா. தேவீகாயத்திரீ சந்தஸ். பரமாத்மாதேவதை. பிராணாயாமத்தில் உபயோகம். பிறகு படிக்கவேண்டிய **भूः** (ஹூ: பூ:)=முதலிய 7 வியாஹிருதிகளுள் **भूः** (ஹூ: பூ:)=என்ற வியாஹிருதிக்கு அத்திரியும், **भुवः** (ஹுவ: புவ:)=என்றதற்கு பிருகுவும், **सुवः** (ஸுவ: ஸுவ:)=என்றதற்கு குத்ஸரும், **महः** (உஹ: மஹ:)=என்தற்கு வஸிஷ்டரும், **जनः** (ஜந: ஜந:)=என்றதற்கு கௌதமரும், **तपः** (தவ: தப:)=என்றதற்குக் காஶ்யபரும், **सत्यम्** (ஸத்யம் ஸத்யம்)=என்றதற்கு அங்கிரஸ்ஸும் ருஷிகள். **भूः** (ஹூ: பூ:)=முதலிய 7 வியாஹிருதிகளுக்கு காயத்திரீ, உஷ்ணிக், அனுஷ்டுப், ப்ருஹதீ, பங்தி, திருஷ்டுப், ஜகதீ இவைகள் முறையே சந்தஸ்ஸுகள். ஷ்டி மந்திரங்களுக்கு அக்னி, வாயு, அர்க்கன், வாகீசன், வருணன், இந்திரன், விச்வேதே

வன் இவர்கள் முறையே தேவர்கள். பிராணுயாமத்தில் உபயோகம். காயத்திரி மந்திரத்திற்கு ருஷிவிச்வாமித்திரர். காயத்ரீ சந்தஸ் ஸவிதா தேவதை. பிராணுயாமத்தில் விநியோகம். ஜபகாலத்தில் மாத்திரம் परमात्मा देवता (பரமாத்மா தேவதா பரமாத்மாதேவதா)=என்றும், जपे विनियोग: (ஜபெவிநியொாமஃஜபேவிநியோக:)=என்றும் மாற்றிக்கொள்ளவேண்டும். சிரோமந்திரத்திற்கு ருஷி பிரஜாபதி. யஜுஸ் சந்தஸ். அக்னி, வாயு, சூரியன் இவர்கள் முறையே தேவதைகள் என்று சொல்லிக்கொள்ளவேண்டும். ओं भू: (ஓம் பூ: ஓம் பூ:)=என்றது முதல் भूर्भुवस्सुवरोम् (பூர்புவஸ்ஸுவரோம் பூர்ப்புவஸ்ஸுவரோம்) என்றது வரையுள்ள மந்திரங்கள் பிராணுயாம மந்திரங்களெனப்படும். அவைகளைப் பிறகு மனத்தால் படிக்கவேண்டும்.

ऋषि: (ருஷி: ரிஷி:)=என்று சொல்லித் தலையிலும், छन्द: (சந்த: சந்த:)=என்று சொல்லி * நாவின் நுனியிலும், देवता (தேவதா தேவதா)=என்று சொல்லி ஹிருதயத்திலும் (நடுமார்பிலும்) கையால்த்தொடவேண்டும். இதற்கு அங்கந்நியாசம் என்றுபெயர். இவ்விதஞ்சொன்னதின் கருத்து என்னை? எனின்:—மந்திரத்தை ஜபித்து அதன்மூலம் தாம் விசேஷப்பயனையடைந்ததுபோலவே எல்லா ஜீவர்களுமடையட்டும் என்ற கருணையால் அதன் ரஹஸ்யத்தை

---

* நாவின் நுனியைத் தொடவேண்டுமென்று பிரபஞ்சசாரம் என்ற மந்திரசாஸ்திரம் கூறுவதால், அதன்படி நாவின் நுனியைத்தொடுவதே உசிதமாயினும் தத்காலமுள்ள சிஷ்டர்கள் மூக்கின் நுனியையே தொடுகின்றனர். அதன் பிரமாணத்தை ஆவர்களிடமே கேட்கவேண்டும்.

மஹருஷிகள் வெளியிட்டனராதல்பற்றி குருவாகின்றனர். தயாமூர்த்தியான குருவைச்சிரமேல் வைத்துக் கொண்டாடுகிறேன் என்று காட்டவே ருஷி என்று சொல்லிச் சிரஸ் தொடப்படுகின்றது. எம்மந்திரஜபத்தால் ருஷிகள் விசேஷப்பயனை யடைந்தனரோ அம்மந்திரம் நாவினுலுச்சரிக்கப் படுவதாலும், பகவானின் முகத்திலிருந்து வெளிவந்திருப்பது பற்றி நித்தியமாகையாலும் நித்தியமான அம்மந்திர ஜபத்தால் விசேஷப்பயனை நாம் அடைவது நிச்சயம் என்று காட்டவே छन्दः (ஃசந்த:)=என்று நாவின் நுனியில் நியாஸஞ் செய்யப்படுகின்றது. மந்திரத்தின் பொருளானதேவதை வெளிதேசத்திலிருக்குமாயின் ஒரு ஸமயம் தான் செய்யவேண்டிய கர்மத்தை உதாஸீனம் செய்யக்கூடுமாதல்பற்றி அத்தேவதை தனது ஹிருதயாகாசத்தில் பிரவேசித்திருப்பதாக வெண்ணி மனதால் த்யானிக்கவேண்டும் என்ற அபிப்பிராயத்தால் देवता (தேவதா தேவதா)= என்று சொல்லி ஹிருதயமிருக்குமிடமான மார்பில் நியாஸஞ்செய்யவேண்டும். இவ்விதமே பிரபஞ்ச ஸாரம் என்ற மந்திர சாஸ்திரத்தில்,

ऋषिर्गुरुत्वाच्छिरसैव धार्यश्छन्दोऽक्षरत्वात् रसानागतं स्यात्।
धियावगन्तव्यतया सदैव हृदि प्रविष्टा मनुदेवता च।(पटल५.श्लो २.॥

𑌋𑌷𑌿𑌰𑍍𑌗𑍁𑌰𑍁𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌛𑌿𑌰𑌸𑍈𑌵 𑌧𑌾𑌰𑍍𑌯𑌶𑍍𑌛𑌨𑍍𑌦𑍋𑌽𑌕𑍍𑌷
𑌰𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌰𑌸𑌨𑌾𑌗𑌤𑌂𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌧𑌿𑌯𑌾𑌵𑌗𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌤
𑌯𑌾 𑌸𑌦𑍈𑌵 𑌹𑍃𑌦𑌿 𑌪𑍍𑌰𑌵𑌿𑌷𑍍𑌟𑌾 𑌮𑌨𑍁 𑌦𑍇𑌵𑌤𑌾 𑌚 ॥

ருஷிர்குருத்வாத் சிரஸைவதார்ய: சந்தோக்ஷ
ரத்வாத் ரஸனுகதம்ஸ்யாத் । தியாவகந்தவ்யத
யாஸதைவஹிருதி ப்ரவிஷ்டாமனு தெவதா ச ॥

என்றதால் ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாசாரிய ஸ்வாமிகளவர்கள் கூறியிருக்கின்றனர். இவ்விதமே இனி சொல்லப்படும் ருஷி, சந்தஸ் தேவதை இவைகளை யுச்சரிக்கும் பொழுது அவ்வவற்றிற்குரிய விடங்களைத் தொட்டுக்கொள்வதுடன் மேற்சொல்லியதே அவற்றின் கருத்தென்றும் அறியவேண்டும்.

பிராணாயாம விசாரம்.

प्राणो वायुश्शरीरस्थ आयामः तस्य निग्रहः ।
प्राणायाम इति प्रोक्तो द्विविधः प्रोच्यते हि सः ॥
अगर्भश्च सगर्भश्च द्वितीयः प्रोच्यते वरः ।
जपध्यानादिभिर्युक्तं सगर्भं ते विदुर्बुधाः ॥
तदपेतं विगर्भं स्यात् प्राणायामं परे विदुः ।

ப்ராணோ வாயுஶ்ஶரீரஸ்த ஆயாம: தஸ்ய நிக்ரஹ: ।
ப்ராணாயாம இதி ப்ரோக்தோ த்விவித: ப்ரோச்யதே ஹி ஸ: ॥
அகர்பஶ்ச ஸகர்பஶ்ச த்விதீய: ப்ரோச்யதே வர: ।
ஜபத்யாநாதிபிர்யுக்தம் ஸகர்பம் தே விதுர்புதா: ॥
ததபேதம் விகர்பம் ஸ்யாத் ப்ராணாயாமம் பரே விது: ।

பிராணன் என்றால் சரீரத்திலுள்ள காற்று. ஆயாமம் என்றால் அதனை அடக்குவது. இந்தப்பிராணாயாமம் அகர்ப்பம் என்றும், ஸகர்ப்பம் என்று மிருவகைப்படும். இவற்றுள் ஸகர்ப்பம் மிகவும் சிறந்தது. ஜபம் தியானம் இவற்றுடன் செய்வது ஸகர்ப்பம் என்றும், இவையல்லாது செய்வது அகர்ப்பம் என்றும் நாரதர் சொன்னதிலிருந்து ஜபமவஶ்யமென்றும் ஜபத்துடன் செய்யப்படும் பிராணாயாமமே உத்தமமென்றும் ஏற்படுகின்றது.

भूर्भुवस्स्वर्महर्जनस्तपस्सत्यं तथैव च ।
प्रत्योङ्कारसमायुक्तं तथा तत्सवितुः परम् ॥
ओमापोज्योतिरित्येतच्छिरः पश्चात्प्रयोजयेत् ।
ओमापोज्योतिरित्येष मन्त्रो वै तैत्तिरीयकः ॥
त्रिरावर्तनयोगात्तु प्राणायामस्स शब्दितः ।

பூர்புவஸ்ஸ்வர்மஹர்ஜநஸ்தபஸ்ஸத்யம் ததைவ ச ।
ப்ரத்யோங்காரஸமாயுக்தம் ததா தத்ஸவிதுः பரம் ॥
ஓமாபோஜ்யோதிரித்யேதச்சிரः பஶ்சாத்ப்ரயோஜயேத் ।
ஓமாபோஜ்யோதிரித்யேஷ மந்த்ரோ வை தைத்திரீயகः ॥
த்ரிராவர்தநயோகாத்து ப்ராணாயாமஸ்ஸ ஶப்திதः ।

“ ஒவ்வொன்றிற்கும் பிரணவத்தை முன்னிட்டு 7 வியாஹிருதிகளையும், பிறகு காயத்ரியையும் அதன் பிறகு சிரஸ்ஸையும் மும்முறை ஜபித்தானபின் அதுவே “பிராணாயாமம்” எனப்படும். காயத்ரீசிரஸ் என்பது யஜுர்வேதம் தைத்திரீயாரண்யகத்தில் பிரஸித்தமானது” என்று யோகயாக்ஞ்யவல்க்யரும்,

मुखनासिकासंचारिणं वायुं निरुध्य प्रतिव्याहृति प्रणवेन संयुक्तां गायत्रीं त्रिः जपेत् इत्ययं सर्वत्र प्राणायामः ।

முகநாஸிகாஸஞ்சாரிணம் வாயும் நிருத்ய ப்ரதிவ்யாஹ்ருதி ப்ரணவேந ஸம்யுக்தாம் காயத்ரீம் த்ரிः ஜபேத் இத்யயம் ஸர்வத்ர ப்ராணாயாமः ।

“முகம், நாசிகை இவைவாயிலாக ஸஞ்சரிக்கின்ற காற்றை நெறுத்தி பிரணவத்துடன் கலந்த ஒவ்வொரு வியாஹிருதியையும், காயத்ரியையும் ओमापोज्योतिः ஓமாபோஜ்யோதிः

என்ற சிரோமந்திரத்தையும் மனதால் மூன்றுதடவை ஜபிக்கவேண்டும். இதுவே எல்லாவிடங்களிலும் பிராணுயாமம் எனப்படும்” என்று விக்ஞானேஸ்வரரும் சொல்லி யிருப்பதால் மேற்கூறிய மந்திரஜபம், மந்திரார்த்தத்தை அனுஸந்தித்தல் இவைகளுடன் பிராணுயாமஞ் செய்யவேண்டும் என்றேற்பட்டது. அந்தப்பிராணுயாமம் பூரகம், கும்பகம், ரேசகம் என மூவகைப்படும். அவற்றுள்

नासिकाकृष्ट उच्छ्वासो ध्मातः पूरक उच्यते ।
कुंभको निश्चलश्वासो रिच्यमानस्तु रेचकः॥
वाह्यस्थितं प्राणपुटेन वायुमाकृष्य यत्नेन शनैस्समस्तम् ।
नाड्यश्च सर्वाः परिपूरणीयाः स पूरको नाम महान्निरोधः ॥

आकेशाग्रान्नखाग्राच्च निरोधश्शस्यते बुधैः ।
निरोधाज्जायते वायुर्वायोरग्निश्च जायते ॥

अग्नेरापश्च जायन्ते ततोऽन्तश्शुध्यते त्रिभिः ।

நாஸிகாக்ருஷ்ட உச்ச்வாஸோ த்மாத: பூரக உச்யதே ।
கும்பகோ நிச்சலச்வாஸோ ரிச்யமாநஸ்து ரேசக: ॥
வாஹ்யஸ்திதம் ப்ராணபுடேந வாயுமாக்ருஷ்ய யத்நேந ஶநைஸ்ஸமஸ்தம் । நாட்யஶ்ச ஸர்வா: பரிபூரணீயா:
ஸ பூரகோ நாம மஹாந்நிரோத: ॥

ஆகேஶாக்ராந்நகாக்ராச்ச நிரோதஶ்ஶஸ்யதே புதை: ।
நிரோதாஜ்ஜாயதே வாயுர்வாயோரக்நிஶ்ச ஜாயதே ।
அக்நேராபஶ்ச ஜாயந்தே ததோऽந்தஶ்ஶுத்யதே த்ரிபி: ।

“நாசியால் சுவாஸத்தை உள்ளுக்கு வாங்குதல் பூரகமெனப்படும். சுவாஸத்தை உள்ளுக்கு வாங்காமலும் வெளியில் விடாமலும் அசையாது தரித்தல் கும்பகமாகும்.

சுவாஸத்தை வெளிவிடுதலே ரேசகமாகும். சுத்தமான காற்றை வெளியிலிருந்து நாஸியால் வெகு ஸாவதானமாய் முழுமையுமிழுத்து எல்லா நாடிகளையும் நிறப்புவதே பூரகமென்றும், மஹாப்ராணுயாமம் என்றும் சொல்லப்படும். இப்பூரக மஹாப்பிராணுயாமத்தில் சரீரத்தில் தலைமுதல் கால்நுனிவரை நிறைந்திருக்கும்படி வாயுவை இழுத்து அடக்கவேண்டும். அங்ஙனம் சரீரம்முழுவதும் வியாபித்த வாயுவினின்றும் அக்னி (ஓர்விதசூடு) உண்டாகும். அதி னின்றும் ஜலம் (வியர்வை) உண்டாகும். அவ்விதமுண்டானதும் உள்ளடக்கினவாயு, அதனின்றுமுண்டான உஷ்ணம் வியர்வை இவைகளால் மிகவும் சுத்தியையடைகிருன்" என்றுயோக யாக்ஞ்யவல்க்யர் கூறியிருக்கிருர். ஆயினும் இவ்விஷயத்தில்,

> क्रमादभ्यस्यतः पुंसो देहे स्वेदोद्गमोऽधमः ।
> मध्यमः कंपसंयुक्तः भूमित्यागः परो मतः ॥

𑌕𑍍𑌰𑌮𑌾𑌦𑌭𑍍𑌯𑌸𑍍𑌯𑌤𑌃 𑌪𑍁𑌂𑌸𑍋 𑌦𑍇𑌹𑍇 𑌸𑍍𑌵𑍇𑌦𑍋𑌦𑍍𑌗𑌮𑍋𑌽𑌧𑌮𑌃।
𑌮𑌧𑍍𑌯𑌮𑌃 𑌕𑌂𑌪𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌭𑍂𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌪𑌰𑍋 𑌮𑌤𑌃 ॥

முறையே பிராணுயாமத்தை யப்பியஸிக்கின்ற மனிதனுக்கு சரீரத்தில் வியர்வையுண்டாவது அதமம் (அதாவது பிராணுயாமஸித்தியின் ஆரம்பநிலை) என்றும், சரீரத்தில் அசைவுண்டாவது நடுநிலை என்றும், பூமியைவிட்டு உயரக் கிளம்புவது உத்தமநிலை என்றும் யோகசாஸ்திரத்தில் சொல்லியிருப்பதை யொட்டி மேற்கூறிய யோகயாக்ஞ்யவல்க்யவசனமானது பிராணுயாமஸித்தியின் ஆரம்பநிலையைக் குறிக்கின்றதாகக் கொள்ளவேண்டும். மேற்கூறிய பூரகம், ரேசகம், கும்பம் என்ற பிராணுயாமம் எளிதில்

வருவது கஷ்டமாதலால் அதைப் பழக்கத்தில் கொண்டு வரவேண்டிய முறையைப்பதஞ்ஜலி தனது யோகசாஸ்திரத்தில் மூன்று சூத்திரங்களால் சொல்லி, மற்றுமிரண்டு சூத்திரங்களால் அதன்பயனையும் சொல்லியிருக்கிறார். அச்சூத்திரங்களாவன:—

**तस्मिन् सति श्वासप्रश्वासयोर्गतिविच्छेदः प्राणायामः ।**
**बाह्याभ्यन्तरस्तंभवृत्तिर्देशकालसंख्याभिः परिदृष्टो दीर्घसूक्ष्मः ।**
**बाह्याभ्यन्तरविषयाक्षेपी चतुर्थः । ततः क्षीयते प्रकाशावरणम् ।**
**धारणासु च योग्यता मनसः (योगसूत्रे २ पादे ४९-५३)**

𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌸𑌤𑌿 𑌶𑍍𑌵𑌾𑌸𑌪𑍍𑌰𑌶𑍍𑌵𑌾𑌸𑌯𑍋𑌰𑍍𑌗𑌤𑌿𑌵𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑌃
𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑌃 । 𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌸𑍍𑌤𑌂𑌭𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌦𑍇𑌶
𑌕𑌾𑌲𑌸𑌂𑌖𑍍𑌯𑌾𑌭𑌿𑌃 𑌪𑌰𑌿𑌦𑍃𑌷𑍍𑌟𑍋 𑌦𑍀𑌰𑍍𑌘𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌃 ।
𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰 𑌵𑌿𑌷𑌯𑌾𑌕𑍍𑌷𑍇𑌪𑍀 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑌃 ।
𑌤𑌤𑌃 𑌕𑍍𑌷𑍀𑌯𑌤𑍇 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌾𑌵𑌰𑌣𑌂 ।
𑌧𑌾𑌰𑌣𑌾𑌸𑍁 𑌚 𑌯𑍋𑌗𑍍𑌯𑌤𑌾 𑌮𑌨𑌸𑌃 ॥

"வெளியிலுள்ள வாயுவை உள்ளிழுத்தல் ப்ஶ்வாஸம். சரீரத்திற்கு உள்ளிருக்கும் வாயுவை வெளிவிடுதல் பிரஶ்வாஸம். ஆஸனஜயம் வந்தபிறகு இவ்விரண்டு வாயுக்களின் கதியைத்தடுத்தலே பிராணாயாமம்" எனமுதல் சூத்திரத்தால் பொதுவாய்ச்சொல்லி அதை சுகமாய் அறியுமாறு மேல் சூத்திரங்களால்தெளிவுபட உபதேசிக்கிறார். வெளியில்விருத்தியை (ஸஞ்சாரத்தை) யுடையப்ஶ்வாஸம் ரேசகம் என்றும், சரீரத்திற்குள் விருத்தியையுடைய பிரஶ்வாஸம் பூரகமென்றும், உள்ளில் அசைவற்ற விருத்தியையுடைய வாயு கும்பகம் என்றும் சொல்லப்படும். குடத்தில்வைத்த ஜலம் அசைவற்றிருப்பதுபோல ஸ்தம்ப விருத்தி ரூபமான கும்ப

கத்தில் வாயுவானது அசைவற்றதாய் நிலைத்து நிறுத்தப்படு கின்றதுபற்றி அதற்குக் கும்பகம் என்றபெயர் பொருத்த முள்ளதாகின்றது. மேற் சொல்லிய ரேசகம் பூரகம், கும்ப கம் என்ற மூன்று விதப்பிராணாயாமமும் தேசம், காலம், என் இவைகளுள்ளதாகச் செய்யும்பொழுது தீர்க்க ஸூக்ஷ்மம் என்ற பெயருள்ளதாக ஆகின்றது. அவற்றுள் தேசத் தை முன்னிட்டுச் செய்வது யாது என்பதை முதலில் தெளிவுபடுத்துவாம்.

சரீரத்தில் குதத்திற்கு இரண்டு அங்குல அளவிற்கு மேலும், மேட்ரத்திற்கு இரண்டு அங்குலம் கீழுமுள்ள விடத்தில் நான்கு அங்குல விஸ்தாரமுள்ளதாயும், கோழி முட்டையின் வடிவமுள்ளதாயும் ஓர் வஸ்து இருக்கின்றது. அதற்கு "கந்தமூலம்" என்று பெயர். அதினின்றும் எழுபத்தீராயிரம் நாடிகள் உண்டாகின்றன. அந்தக் கந்த மூலத்தினின்றும் கழுத்து வரை நீளமுள்ளதாயிருக்கின்ற முதுகின் நடுவிலுள்ள பெரிய எலும்புக்கு "மேரு" என்றும், "வீணாதண்டம்" என்றும் பெயரிடப் பட்டிருக்கிறது. அம்முதுகெலும்பின் துவாரத்தில் கந்த மூலத்தினின்றும் கிளம்பின "சுஷும்னை" என்ற நாடி செல்லுகின்றது. அந்தமேருவின் வெளிப்பாகத்தின் இடதுபக்கத்தில் "இளா" என்ற நாடியும், வலதுபக்கத்தில் "பிங்களா" என்ற நாடியும் செல்லுகின்றது. அந்த இளா நாடியானது சந்திரன்போல் வெண்ணிறமுள்ளதென்றும், சக்தியின் ஸ்வரூபமென்றும் அமுதப் பெருக்கைத்தருந் தன்மையுள்ளதென்றும் சொல்லப்படும். வலதுபக்கம் செல்லுகின்ற பிங்களா நாடியானது ஸூரியஸ்வரூப முள்ளதென்றும், மாதளந்தாதின் நிறமுள்ள

தென்றும், ருத்திரனின் சுவரூபமென்றும் சொல்லப்படும். இடை, பிங்கலை என்ற இவ்விரண்டு நாடிகளும் கந்தமூலத்தி னின்றும் ஒழுங்காய் ஆக்ஞாசக்கிரம்வரை வந்து அங்கிருந்து இடை இடது நாசித்வாரத்தையும், பிங்கலை வலது நாசித்வா ரத்தையுமடைந்திருக்கின்றது. இவ்விதமிருப்பதால் இடது நாசியின் துவாரத்திலிருக்கின்ற இடை என்ற நாடியால் வா யுவை இழுத்துப் பூரகஞ்செய்து, புருவத்தின் நடுவிலிருக் கும் சுஷும்னு நாடியில் நிறுத்தி கும்பகஞ்செய்து வலது பக்கம் நாசித்துவாரத்திலிருக்கும் "பிங்கலை" என்ற நாடி வழியாக ரேசகஞ் செய்யவேண்டும். மேலும் இடை பிங்கலை என்ற நாடி விஷயத்தில் மற்றுஞ் சில விசேஷங்களிருக்கின் றன. அவையாவன:—

இடை பிங்கலை என்ற இவ்விரண்டு நாடிகளும் (1) मूला-धारम् (𑌮𑍂𑌲𑌾𑌧𑌾𑌰𑌂 மூலாதாரம்) (2) स्वाधिष्ठानम् (𑌸𑍍𑌵𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌂 சுவாதிஷ்டானம்) (3) मणिपूरकम् (𑌮𑌣𑌿𑌪𑍂𑌰𑌕𑌂 மணிபூரகம்) 4 अनाहतम् (𑌅𑌨𑌾𑌹𑌤𑌂 அநாஹதம்) 5 विशुद्धि (வி

---

(1) மூலாதார சக்கிரமென்பது சரீரத்தின் உள்பாகத்தில் குத த்திற்கு மேலும் ஆண்குறிக்கு கீழுமுள்ள நான்கு அங்குல மளவுள் ள இடம். (2) சுவாதிஷ்டான மென்பது ஆண்குறிக்கு நேராகவும் மூலாதாரத்திற்கு மேலும் சரீரத்திற்குள்ளிருக்குமிடம். (3) மணி பூரகமென்பது உந்திக்கு நேராகவும், ஸ்வாதிஷ்டானத்திற்கு மேலா கவும் சரீரத்திற் குள்ளிருக்குமிடம். 4 அநாஹத சக்கிரமென்பது மணிபூரகத்திற்கு மேலும், மார்பின் நடுக்குழிக்கு நேராகவும் சரீரத் திற்குள் ளிருக்குமிடம். அதுவே ஹிருதயமெனப்படும். 5 விசுத்தி சக்கிரமென்பது அநாஹதத்திற்கு மேலும், கழுத்திலுள்ள குழிக்கு நேராகவும் சரீரத்திற்குள்ளிருக்குமிடம். 6 ஆக்ஞாசக்கிரமென்பது புருவத்தின் நடுவிற்கு நேராக உள்பிரதேசத்திலிருக்குமிடம்.

ஶுத்தி· விசுத்தி) 6 आज्ञाचक्रम् (ஆஜ்ஞா சக்ரம் ஆக்ஞாசக்கிரம்) என்ற 6 ஆதாரசக்கிர கமலங்களிலும் சுற்றிக்கொண்டே (அதாவது மூலாதாரம் முதல் ஆக்ஞாசக்கிரம்வரைவந்தே) நாசித்துவாரங்களை வந்தடைகின்றன என்று ஒரு மந்திரசாஸ்திர சித்தாந்தம். வேறுமந்திர சாஸ்திரத்தில் இளை பிங்களை என்ற இவ்விரண்டு நாடிகளுள் இளை என்ற நாடியானது இடதுபக்கத்திலுள்ள அண்டத்திலிருந்து கிளம்பி மேருவின் உட் செல்லுகின்ற ஸுஷும்னையின் ஸம்பந்தம் பெற்று வலது பக்கத்திலுள்ள தோளிற்கும் கழுத்திற்கும் பூட்டான 'ஜத்ரு' என்ற இடம் வரைவந்து அங்கிருந்து இடதுபக்கத்து ஜத்ருவரைவந்து அங்கிருந்து ஆக்ஞாசக்கிரம்வரை சென்று அங்கிருந்து வலது நாசித்வாரத்தை வந்தடைகின்றது. அதுபோலவே பிங்களா நாடியும் வலதுபக்கத்திலுள்ள அண்டத்தினின்றும் கிளம்பி சுஷும்னை என்ற நாடியின் ஸம்பந்தமடைந்து இடதுபக்கத்திலுள்ள தோளிற்கும் கழுத்திற்கும் பூட்டான 'ஜத்ரு' என்ற இடம்வரைவந்து அங்கிருந்து வலதுபக்கத்து ஜத்ருவரை வந்து பிறகு ஆக்ஞாசக்கிரம்வரை சென்று அங்கிருந்து இடது நாசித்வாரத்தை வந்தடைகின்றது. ஆனது பற்றியே இவ்விரண்டு நாடிகளும் வில்வளைவாகவே மூலாதாரம் முதல் நாசித்வாரம் வரை வருகின்றன. ஆகவே இளை பிங்களை என்ற இவ்விரண்டு நாடிகளும், மேருவின் நடுவிலுள்ள ஒட்டையின் வழியாகவரும் சுஷும்ணு நாடியும் புருவத்தின் நடுவில் பின்னல் போலவாகி அதினின்றும் பிரிந்து இளை பிங்களை என்ற நாடிகள் நாசிதுவாரத்தை வந்தடைகின்றன. புருவத்தின் நடுவில் ஏற்படும் இளை, பிங்களை, சுஷும்னை இந்த நாடிகளின் சேர்க்கையைப்பற்றிய,

इडायां यमुना देवी पिङ्गलायां सरस्वती ।
सुषुम्नायां वसेद्गङ्गा तासां योगस्त्रिधा भवेत् ॥

संगता ध्वजमूले च विमुक्ता भ्रूवियोगतः ।
त्रिवेणी संगमः प्रोक्तस्तत्र स्नानं महाफलम् ॥

இடாயாம் யமுநா தேவீ பிங்களாயாம் ஸரஸ்வதீ ।
ஸுஷும்நாயாம் வஸேத்கங்கா தாஸாம் யோகஸ்த்ரிதா பவேத் ॥

ஸங்கதா த்வஜமூலே ச விமுக்தா ப்ரூவியோகத: ।
த்ரிவேணீ ஸங்கம: ப்ரோக்தஸ்தத்ர ஸ்நாநம் மஹாபலம் ॥

என்ற ராஜயோக சாஸ்திர வசனப்படி இளையில் யமு னையும், பிங்களையில் ஸரஸ்வதியும், சுஷும்னையில் கங்கை யும் வஸிக்கின்றன. அந்நாடிகளின் சேர்க்கை "த்ரிவேணீ யோகம்" எனப்படும். அந்த த்ரிவேணீயோகம் புருவத் தின் நடுவிலேற்படுகின்றது. அங்கு ஸ்நானஞ் செய்வது அதிகப் பலனைத் தரும் என்று சொல்லப்பட்டிருக்கிறது

ஆகவே மேற் சொன்ன எந்த முறைப்படியும் இளை பிங்களை என்ற நாடிகள் நாசித்துவாரத்திலிருப்பனவாகவே ஏற்படுகின்றன வாதலால் அந்த நாடிகளுள் இளை என்ற நாடியால் வெளியிலுள்ள வாயுவை உள்ளுக் கிழுத்து பூர கஞ் செய்யும் காலத்தும், பிங்களையால் ரேசகஞ் செய்யும் காலத்தும், இயற்கையில் வாயுவின் கதியானது எவ்வளவு தூரத்தில் முடிவடையக்கூடுமோ அத்தேசத்தைவிட அதிக தேசம் செல்லும்படி பழக்கத்தில் கொண்டுவர வேண்டும். அதாவது ஒவ்வொரு மனிதனுக்கும் இயற்கையில் சுவாச

மானது நாசித்துவாரத்தினின்றும் 6 * அங்குல தூரமே வெளிவருகின்றது. அவ்விதமே 6 அங்குல தூரம் வெளியிலிருந்து உட் செல்லுகின்றது. இத்தகைய வாயுவின் கதியை (ஓட்டத்தை) தன் முயற்சியால் ஒவ்வொரு தினமும் மேற் சொல்லிய மந்திர ஜபம், மந்திரார்த்தானு சந்தானம் இவைகளுடன் நாளடைவில் 12, 24 அங்குல தூரம் சரீரத்திற்குள் செல்லும்படி பழக்கி வருவதுடன் சரீரத்திற்கு வெளியிலும் 6 அங்குல தூரம் இயற்கையில் செல்வதை ஒவ்வொருதினமும் மேற்சொல்லிய மந்திர ஜபம், மந்திரார்த்தா நுஸந்தானம் இவைகளுடன் நாளடைவில் 12, 24 அங்குல தூரஞ் சரீரத்திற்கு வெளியிலும் செல்லும்படி பழக்கி வரவேண்டும். அதனால் பிராணகதியை தன்வசமாக்கிக்கொண்டு சுஷும்ன நாடி இருக்கும் புருவ மத்தியில் மேற்கூறிய இருவிதகதியுமின்றி வாயுவை நிறுத்திவரவேண்டும். இதுவே கும்பக மெனப்படும். அவ்விடம் நிறுத்தப்படும் பிராணன் எவ்வளவுகாலம் அசைவற்றிருக்கின்றதென்பதைக் கண்டு கொள்வதற்கு அடியில் காட்டிய முறைப்படி மாத்திராகாலந் தெரிந்து அதினின்று வாயு நிற்கும் காலத்தையு மறிந்துகொள்வது அவசியம். மாத்திராகாலமாவது:— தனது முழங்காலை அதிக வேகமில்லாமலும், அதிக விளம்பமில்லாமலும் கையால் ஒரு தடவை சுற்றிக் கைவிரலைச் சொடுக்குவதற்கு நேரும் காலம். இவ்விதம் 12, 24, 36, 48, 64 என்ற முறையில் கும்பகத்தை யப்யசிக்கவேண்டும். ரேசகம், பூரகம் இவ்விரண்டிற்கும் இம்மாத்திராகாலம் உப

---

* 12 அங்குல தூரம் வெளிவருகின்றதென்றும் அவ்விதமே அனுபவமிருக்கின்றதென்றும் சொல்லுவாருமுளர்.

போகப்படலாம். அவ்வளவு மாத்திராகாலம் ரேசகம், பூரகம், கும்பகம் இவைகளைச் செய்யப் பயிற்சிபெறின் அதனின்றும் சாஸ்திரங்களிற் சொல்லிய சில சித்தி விசேஷங்களையும் நேரில் அனுபவிக்கலாம். ஆயினும் இவ்விதப் பிராணுயாம சித்திவிரைவிலுண்டாக வேண்டுமென்று ஆசைகொண்டு ஆலோசனையின்றித் தனது சக்திக்குமீறி அதிகக்காலம் பிராண நிரோதஞ் செய்யக்கூடாது. அவ்விதஞ் செய்தால்,

हठान्निरुध्यमानस्तु कुष्ठादि जनयत्यपि ।
तस्माद्यापयितव्योऽसौ क्रमेणारण्यहस्तिवत् ॥

ஹடாந்நிருத்யமாநஸ்து குஷ்டாதி ஜநயத்யபி ।
தஸ்மாத்யாபயிதவ்யோऽஸௌ க்ரமேணாரண்யஹஸ்திவத் ॥

"பிடிவாதத்துடன் அதிகக் காலமடக்கப்பட்ட வாயுவானது குஷ்டம் முதலிய ரோகங்களை யுண்டுபண்ணும். ஆதலால் காட்டில் தனது இஷ்டப்படி சஞ்சரித்த யானையைப் பிடித்துப் பழக்குவதுபோலவே இவ்வாயு விஷயத்திலும் சாவதானமாய் நடத்தலவச்யமாகின்றது" என்று யோக சாஸ்திரத்தில் சொல்லியபடி தீங்கே நேருமென்று அறியவும். ஆகவே இவ்விதம் ஒவ்வொரு தினமுஞ் செய்துவருவதே "தீர்க்க ஸூக்ஷ்ம பிராணுயாமம்" என்று பதஞ்ஜலி உபதேசித்தார். பழக்கத்திற்குத் தக்கபடி ரேசகத்தையோ பூரகத்தையோ செய்து ஒருவித சலனமுமில்லாது வாயுவை நிறுத்தவேண்டும். ரேசகத்தை முன்னிட்டுக் கும்பகஞ் செய்தால் அது ரேசக கும்பகமென்றும், பூரகத்தை முன்னிட்டுக் கும்பகஞ் செய்தால் பூரககும்பகம் என்றும் கும்பகமிரண்டுவிதமாகின்றது. இவ்விதமல்லாது

நீண்டகாலப் பழக்கத்தை யொட்டி ரேசகத்தையோ, பூரகத்தையோ செய்யாது தனிமையில் கும்பகத்தை மட்டு மநுஷ்டித்தால் அது சுத்தக் கும்பகமெனப்படும் என்று யோக சூத்திரத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும்

नातितृप्तः क्षुधार्तो वा न विण्मूत्रप्रबाधितः ।
नाध्वखिन्नो न चिन्तार्तः प्राणायामं समभ्यसेत् ॥

நாதித்ருப்த꞉ க்ஷுதார்தோ வா ந விண்மூத்ரப்ரபாதித꞉ ।
நாத்வகின்னோ ந சிந்தார்த꞉ ப்ராணாயாமம் ஸமப்யஸேத் ॥

அதிகம் ஆஹாரத்தை உட்கொண்டு திருப்தியையடைந்த காலத்தோ, அதிகம் பசியிருக்கும் காலத்தோ, மலஜல பாதை இருக்கின்ற காலத்தோ, வழிநடந்து களைப்படைந்த காலத்தோ மனக்கவலை யுள்ளபொழுதோ பிராணாயாமஞ் செய்தல் கூடாதென்றும் யோக சாஸ்திரத்திற் கூறப்பட்டிருக்கிறது. ரேசக பூரகங்களை யநுஷ்டிக்கும்பொழுது

इडया कर्षयेद्वायुं बाह्यं षोडशमात्रया ।
धारयेत्पूरितं योगी चतुःषष्ट्या तु मात्रया ॥

सुषुम्नामध्यगं सम्यग्द्वात्रिंशन्मात्रया शनैः ।
नाड्या पिङ्गलया चैनं रेचयेद्योगवित्तमः ॥

भूयो भूयः क्रमात्तस्य व्यत्यासेन समाचरेत् ।
स्रवत्पीयूषधारौघं ध्यायंश्चन्द्रमसं भ्रुवि ॥

प्राणायामेन योगीन्द्रस्सुखमाप्नोति तत्क्षणात् ।
ज्वलज्ज्वलनपुंजाभं शोधयन्तुष्णगुं हृदि ॥

रविणा प्राणमाकृष्य पूरयेदौदरीं गुहाम् ।
पूरयित्वा शनैः पश्चाद्योगी चन्द्रेण रेचयेत् ॥

इत्थं मासत्रयाभ्यासात्तु प्राणायामसेवनात् ।
शुद्धनाडीगणो योगी सिद्धप्राणोऽभिजायते ॥
यथेष्टधारणं वायोरनलस्य प्रदीपनम् ।
नादाभिव्यक्तिरारोग्यं भवेन्नाडीविशोधनात् ॥
रेचकादित्रयाभ्यासः नाडीशोधनपूर्वकः ।
स्वेच्छोत्क्रमणपर्यन्तः प्रोक्तो योगानुशासने ॥

इडया कर्षयेद्वायुं बाह्यं षोडशमात्रया ।
धारयेत्पूरितं योगी चतुःषष्ट्या तु मात्रया ॥
सुषुम्णामध्यगं सम्यग्द्वात्रिंशन्मात्रया शनैः ।
नाड्या पिङ्गलया चैनं रेचयेद्योगवित्तमः ॥
भूयो भूयः क्रमात्तस्य व्यत्यासेन समाचरेत् ।
[illegible] ॥
प्राणायामेन योगी [illegible] तत्क्षणात्
[illegible] हरति ॥
[illegible] ।
[illegible] ॥
इत्थं मासत्रयाभ्यासात्तु प्राणायामसेवनात् ।
शुद्धनाडीगणो योगी सिद्धप्राणोऽभिजायते ॥
यथेष्टधारणं वायोरनलस्य प्रदीपनम् ।
नादाभिव्यक्तिरारोग्यं भवेन्नाडीविशोधनात् ॥
रेचकादित्रयाभ्यासो नाडीशोधन
पूर्वकः । स्वेच्छोत्क्रमणपर्यन्तः
प्रोक्तो योगानुशासने ॥

வெளியிலுள்ள வாயுவை 16 மாத்திராகால முள்ளிழு த்துப் பூரகஞ் செய்யவேண்டும். அவ்விதமிழுத்த வாயுவை

64 மாத்திராகாலம் உள் நிறுத்தல் வேண்டும். 32 மாத்தி ராகாலம் சுஷும்னுநாடியின் நடுவில் நிறுத்திக் கும்பகஞ் செய்து அவ்விதக் கும்பககாலத்திலேயே कुंभकेन जपं कुर्यात् (கும்பகேந ஜபம் குர்யாத்) கும்பகத்தால் ஜபஞ் செய்ய வேண்டுமென்ற வசனப்படி ओंभूः (ஓம் பூ:) முதல் தொடங்கி सुवरोम् (ஸுவரோம்) வரையுள்ள மந்திரத்தை ஜபித்து பிங்களா நாடியால் ரேசகம் (வாயுவை வெளியிடுதல்) செய்யவேண்டும். இவ்விதம் பூரகம், ரேசகம் இவைகளைச் செய்யும்பொழுது நாசித்துவாரத்தை அடிக்கடி மாற்றிக் கொள்ளவேண்டும். அதாவது:—முதலில் இடது நாசியால் இழுத்து வலது நாசியால் விட்டு, பிறகு வலது நாசியால் இழுத்து இடது நாசியால் விட்டு இவ்விதமே ஒவ்வொரு பூரகரேசகங்களையும் மாற்றிமாற்றிச் செய்து பழக்கவேண்டும். இடது பக்கத்து நாசியாலிழுக்கும்பொழுது அமுதப் பெருக்குடன் கூடின சந்திரனைப் புருவத்தின் நடுவில் தியானித்தும், வலதுபக்கத்து நாசியா லிழுக்கும்பொழுது பிரகாசத்துடன் கூடின நெருப்புக்கூட்டத்தின் ஒளியுள்ள சூரியனை ஹிருதயத்தில் தியானித்தும் வரவேண்டும். பிறகு ओंभूः (ஓம் பூ:) முதலிய மந்திரங்களைச் சொல்லி மெதுவாகக் கும்பகஞ் செய்து இடது நாசியால் விடவேண்டும். இவ்விதம் மூன்று மாதகாலம் இடது வலது பக்கங்களை மாற்றி மாற்றி அப்யசித்து வருவானேல் சரீரத்திலுள்ள நாடிகள் சுத்தியையடைவதுடன் பிராணுயாம சித்தியையும் பெறுவான். இதனுல் வாயுவை இஷ்டப்படி நிறுத்தவும், ஜாடராக்னியை விருத்தி செய்துகொண்டு எவ்வளவு ஆஹாரத்தை உட்கொண்டாலும் அவைகளை யுடனே ஜீரணிக்கவும் சக்தியைப் பெறுவதுடன் வீணை, வேணு, கண்டா

முதலியவற்றின் ஒலியை அனுபவித்தலும், ஆரோக்யமும், நினைத்தபடி உயரக் கிளம்புதல் வரையுள்ள சித்தி விசேஷங்களுமுண்டாகுமென்றும் சாஸ்திரங்கள் சொல்லுவதால்இடை பிங்களை இந்நாடிகளை மாற்றிக்கொள்வதவசியம். மேலும்,

**तपो न परं प्राणायामात्, ततो विशुद्धिर्मलानां दीप्तिश्च ज्ञानस्य**

தபோ ந பரம் ப்ராணாயாமாத், ததோ விஶுத்திர்மலாநாம் தீப்திஶ்ச ஜ்ஞாநஸ்ய ॥

பிராணாயாமத்தைக்காட்டிலும் மேலான தவமில்லை. அதனால் காமம், குரோதம் முதலிய மலங்கள் யாவும் விலகி மனந்தெளியும். அதனால் க்ஞானப்பிரகாச முண்டாகும் என்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றன.

இவ்விதப் பிராணாயாமத்தை 8-வது வயதில் உபனயனஞ் செய்விக்கப்பட்டசிறுவனும், மற்று மசக்தர்களும் செய்வது அசாத்யமாதலால்,

**अशक्तिस्स्याद्यदि प्रोक्तप्राणायामे द्विजन्मनः।**
**बालस्य चेतरेषां च दशकृत्वो जपस्स्मृतः ॥**
**त्रिरावर्तनयोगात्तु प्राणायामस्स कल्पितः ।**

அஶக்திஸ்ஸ்யாத்யதி ப்ரோக்தப்ராணாயாமே த்விஜந்மந: ।
பாலஸ்ய சேதரேஷாம் ச தஶக்ருத்வோ ஜபஸ்ஸ்ம்ருத: ॥
த்ரிராவர்த்தநயோகாத்து ப்ராணாயாமஸ்ஸ கல்பித: ।

மேற்சொல்லிய முறைப்படி செய்யச் சக்தியற்ற சிறுவனும் மற்றவர்களும் **ओं भूः** (ஓம் பூ:) முதல் **सुवरोम्** (ஸுவரோம்) வரையுள்ள மந்திரத்தை மூன்றுதடவை ஒரே மூச்சில் ஜபிப்பது என்ற முறைப்படி 10 தடவை ஜபிப்பார்களேயானால் அவர்கட்கும் முறையே மேற் சொல்லிய பிரா

ணுயாமாப்யாச சக்தி யுண்டாகுமென்று சாஸ்திரஞ் சொல்லியதை யொட்டி நமது ஆர்ய மஹான்கள் சிறுவர்க்கும் மற்றவர்க்கும் பத்துத்தடவை மந்திர ஜபத்தை ஏற்படுத்தி இருக்கின்றனர். ஆகவே பிராணுயாமம் அதிகப்பலனைத் தரத்தக்கதாக இருப்பதால் சக்திக்குத் தக்கபடி அப்யசித்து வரவேண்டுவது அவசியமானது.

(अथ प्राणायाममन्त्रार्थः 𑌅𑌥 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌃)

(பிராணுயாம மந்திரத்தின் பொருள்)

**ओम्** (𑌓𑌮𑍍 ஓம்)=இதற்குப் பிரணவம் என்றும், தாரம் என்றும் பெயருண்டு. இந்த **ओं** (𑌓𑌮𑍍 ஓம்)=என்ற மந்திரத்தில் **अ**, (𑌅 அ)=**उ**, (𑌉 உ)=**म्**, (𑌮𑍍 ம்)=என்ற அக்ஷரங்களடங்கி இருக்கின்றன. அவற்றுள் **अ** (𑌅 அ)=என்றதற்குப் பிரும்மதேவன் என்றும், **उ**, (𑌉 உ)=என்றதற்கு விஷ்ணு என்றும், **म्** (𑌮𑍍 ம்)=என்றதற்கு மஹாதேவன் என்றும் தனித்தனியே பொருள். ஆகவே **अ**, (𑌅 அ) **उ**, (𑌉 உ) **म्**, (𑌮𑍍 ம்) என்ற இம்மூன்று அக்ஷரங்களும் சேர்ந்து **ओम्** (𑌓𑌮𑍍 ஓம்)= என்ற ஒரு ஸ்வரூபத்தை யடைந்திருப்பதால் அதற்கு பிரும்மா விஷ்ணு சிவன் என்ற மும்மூர்த்திகளின் சுவரூபமாகவும் விளங்கும் பரமாத்மாவே பொருள் என்று ஏற்படுகின்றது. அதனின்றும் பிரும்ம விஷ்ணு மஹேச்வர வடிவமான யாதொரு பரமாத்மாவுண்டோ அவருக்கு இந்தப்பிரணவம் வாசகம் (பெயர்) என்று மேற்படுகின்றது. **भूः**= (𑌭𑍂𑌃 பூ:)=பூலோகமும், **भुवः**=(𑌭𑍁𑌵𑌃 புவ:)=புவர்லோகமும், **सुवः**=(𑌸𑍁𑌵𑌃 ஸுவ:)=சுவர்லோகமும், **महः**=(𑌮𑌹𑌃 மஹ:)=மஹர்லோகமும், **जनः**=(𑌜𑌨𑌃 ஜன:)=ஜனலோகமும், **तपः**=(தவ: தப:)=தபோலோகமும் **सत्यम्**=(𑌸𑌤𑍍𑌯𑌮𑍍 ஸத்யம்)

